


# எக்காலத்துக்கும் ஏற்ற கதைகள்

சாந்தா ரங்காச்சாரி

நேரு பால புத்தகாலயம்



# எக்காலத்துக்கும் ஏற்ற கதைகள்

சாந்தா ரங்காச்சாரி

தமிழாக்கம் :

அழ. வள்ளியப்பா

படங்கள் :

பி. கேம்ராஜ்





நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா



## யமனை வென்றவள்

இளவரசி சாவித்திரி அவளுடைய தந்தை முன் நின்று கொண்டிருந்தாள். மெல்லிய கொடி போல அவள் அழகாக இருந்தாலும், அவளது மனம் உறுதியாக இருந்தது. முகத்தில் பிடிவாதம் தெரிந்தது. இந்த மாதிரி சமயங்களில் அவளது தந்தை வளைந்து கொடுத்துவிடுவார்.

"தந்தையே, நினைவிருக்கிறதா? என் கணவரை நானே தேர்ந்தெடுக்கலாம் என்று நீங்கள் சொன்னதுண்டா இல்லையா? இப்போது உங்கள் வார்த்தையை நீங்களே மீறலாமா?"

ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தார் மன்னர். அதற்குள் நல்லவேளையாக நாரத முனிவர் குறுக்கிட்டுச் சூடான விவாதம் நேராமல் தடுத்தார். "குழந்தாய் சாவித்திரி, உன் தந்தை சொன்ன வார்த்தையை மீறவில்லை. நீ மணக்க விரும்பும் சத்தியவானைப் பற்றித்தான் அவர் என்னிடம் விசாரித்துக் கொண்டிருந்தார். நான் அவரிடம் விவரம் கூறிக்கொண்டிருக்கும்போது, 'சாவித்திரியையும் இங்கே வரச் சொல்கிறேன். தாங்கள் சொல்வதை அவளும் கேட்கட்டும்' என்று சொன்னார்."

"அப்படித் தாங்கள் என்னதான் சொல்லிக்கொண்டிருந்தீர்கள்?" என்று விசாரித்தாள் சாவித்திரி.

இந்த நாரதர் விஷயத்தில் மிகமிகக் கவனமாக இருக்க வேண்டும் என்பது சாவித்திரிக்குத் தெரியும். கெட்டிக்காரி தான். ஆனால், நாரதர் அவளைவிடக் கெட்டிக்காரரல்லவா? அவர் தேவர்களுக்கும் சரி, மனிதர்களுக்கும் சரி, நண்பராகவும் ஆலோசகராகவும் தூதராகவும் விளங்குகிறவர். நாரதர் செய்கை எப்போதும் நன்மையில்தான் முடியும். இறுதியில் நல்லபடியாக முடிந்தாலும், அவர் தலையிட்டவுடனே ஏற்படுவது தகராறுதான்! ஏனென்றால் தந்திரசாலியான நாரதர் மிகுந்த அறிவாளிகளைக்கூட அலைக்கழித்துவிடுவார்! இப்படிப் பட்ட நாரதருக்கு எப்படித் தகுந்த மரியாதை செலுத்த வேண்டும் என்பதைச் சாவித்திரி அறிந்துவைத்திருந்தாள்.

நாரதர் சொல்லலானார்: "நீ விரும்புகிறாயே சத்தியவான், அவன் நல்ல ராஜ வம்சத்தில் பிறந்தவன். சிறந்த இளைஞன். 'சத்தியவான்' என்பது அவனுக்குப் பொருத்தமான பெயர். சத்தியத்தைத் தவிர அவன் வேறு எதையுமே பேசமாட்டான். அவன் புத்திசாலி. தைரியசாலி. பார்வை தெரியாத வயோதிகத் தந்தையிடம் அவனுக்கு எத்தகைய பக்தி! பாவம், அரசராக இருந்த அவனுடைய தந்தையை ஓர் உறவினன் நம்பிக்கைத் துரோகம் செய்து, காட்டுக்குத் துரத்திவிட்டான். பட்டத்துக்கு உரிமை யிருந்தும், சத்தியவான் அது பற்றிக் கவலைப்படவில்லை. காட்டிலே விறகு வெட்டி, தந்தைக்கு உதவியாக இருந்து வருகிறான்."

"இதெல்லாம் எனக்குத் தெரியுமே!" என்றாள் சாவித்திரி.

"அப்படியா? உனக்கு இதுவும் தெரியும். மேலும் தெரியும் போலிருக்கிறதே!" என்று தூண்டிவிட்டார் நாரதர்.

"முதலில் தங்களுக்கு எவ்வளவு தெரியும் என்பதைப் பார்ப்போம்" என்றாள் சாவித்திரி.

நாரதர் புன்னகையுடன், 'இந்தச் சின்னக் குட்டி என்னை மடக்கப் பார்க்கிறாளா?' என்று நினைத்துக்கொண்டார். பிறகு சொன்னார்: "உனக்குத் தெரியாத ஒன்று எனக்குத் தெரியும். அதைத்தான் உன் தந்தையிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்" என்றார்.

"அவருக்கு ஒரு கண்டம் இருக்கிறது; இன்றிலிருந்து சரியாக ஓராண்டு காலத்தில் இறந்துவிடுவார் என்பதைத்தானே

குறிப்பிடுகிறீர்கள்?'' என்று அமைதியாகக் கேட்டாள் சாவித்திரி.

இதைக் கூறும்போது அவளுக்கு இருந்த துணிச்சலைக் கண்டு பெரியவர் இருவரும் அதிர்ச்சியடைந்தனர்.

''ஏனம்மா, இது தெரிந்துமா நீ அவனை மணக்க விரும்புகிறாய்?'' என்று நடுங்கும் குரலில் தந்தை கேட்டார்.

''அது சரி. உனக்கு இது எப்படித் தெரிந்தது? நீ அவன் பெற்றோரைச் சந்தித்திருக்கிறாயா?'' என்று கேட்டார் நாரத முனிவர்.

''ஆமாம். பக்திமிகுந்த அவருடைய அன்னைதான் எனக்கு இதைச் சொன்னாள். அவர் பிறந்ததும் அவருடைய ஜாதகத்தைக் குறித்த சோதிடர்கள் இது பற்றி எச்சரித்தார்களாம். ஆனால் அவருக்கு இதுவரை இது தெரியவே தெரியாதாம். அவரது பெற்றோர்கள் இவ்வளவு காலமாக இதை இரகசியமாகவே வைத்திருக்கிறார்கள். இதுவே அவர்களுக்குப் பெரும் கவலையாக இருக்கிறது.''

இதைக் கேட்ட நாரதருக்கு அவரை அறியாமலே சாவித்திரியிடம் ஒரு மதிப்பு ஏற்பட்டது. ''ஏனம்மா, சத்தியவானைக் கலியாணம் செய்துகொண்டால் உன் கதி என்ன ஆகும் என்பது உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டார்.

''தெரியுமே.'' என்று தயங்காமல் சொன்னாள் சாவித்திரி.

''உனக்குப் பயமாயில்லையா?''

''பயமா? இல்லவே இல்லை. ஆனால் வருத்தமாக இருக்கிறது. வாழ்வும் சாவும் ஜாதகத்தில் உள்ள கிரகங்களை மட்டுமே வைத்துத்தான் தீர்மானிக்கப்படுகின்றனவா? ஒருவர் வாழ்வினால் மற்றவர் வாழ்வில் மாற்றம் ஏற்படலாம் அல்லவா? நான் அவரை மணந்தால் ஒருவேளை என் விதி அவரைக் காப்பாற்றலாம். என்ன நடக்கும் என்பதோ, அல்லது எதை நடக்காமல் தடுக்கலாம் என்பதோ யாருக்குத் தெரியும்?''

''அசுவபதி அரசே! இந்தத் திருமணத்திற்கு இனி எவ்விதத் தடையும் கூடாது. உடனே இவள் திருமணத்தை நிச்சயித்துவிடுங்கள்'' என்று நாரதர் கூறி எழுந்தார். சாவித்திரி அவரிடம் விடைபெற வந்து வணங்கியபோது, ''இளவரசியே, நானோ ஒரு பிரம்மசாரி. ஆனாலும் என் ஆசி



எப்போதும் உனக்கு உண்டு. உன் தைரியம் உன்னையும் சத்தியவானையும் காப்பாற்றுவதாக!'' என்று புன்சிரிப்புடன் வாழ்த்துக் கூறினார்.

அந்த அழகிய அரசகுமாரி அவ்விடம் விட்டு அகன்றதும் அசுவபதி பெருமூச்செறிந்தார். ''இவள் ஓர் ஆணாகப் பிறக்காமல் போய்விட்டாள். ஓர் ஆணுக்கு வேண்டிய புத்திசாலித்தனமும் சாதுரியமும் இவளிடம் நிறைய இருக்கின்றன. ஆனாலும் இப்போது இவளது துருதுருப்பே இவளுக்கு ஒரு தடையாக இருக்கப்போகிறது'' என்றார்.

''அசுவபதி, இந்த விஷயங்களில், நாம் பழங்காலத்து மனிதரைப் போல் இருக்கக்கூடாது. ஆண்களைப் போலவே பெண்களும் சொந்தமாகச் சிந்தித்து முடிவு எடுப்பது அவசியம். பெண்கள் என்றால் மட்டமா என்ன?'' என்று நாரதர் கடிந்துகொண்டார். ''எது எப்படியானாலும் சாவித்திரி காட்டிலே நல்லபடியாக வாழுவாள். விறகுவெட்டியான கணவனுக்கும் பார்வை தெரியாத மாமனாருக்கும் பக்திமிகுந்த மாமியாருக்கும் பணிவிடை செய்து மகிழுவாள்'' என்றார்..

சாவித்திரி சத்தியவானை மணந்து மகிழ்ச்சியாகவே இருந்தாள். அரண்மனையைக் காட்டிலும் அந்தக் காட்டு வாழ்க்கை அவள் மனத்துக்கு இன்பமளித்தது. சுதந்திரமாக அவள் இருந்தாள். காலையில் கீச்சு கீச்சு என்று பறவைகள் கத்தும்; பசுக்கள் 'மா, மா' என்று கத்திக் கன்றுகளை அழைக்கும். அப்போதே அவள் எழுந்துவிடுவாள். மாமியாரும் மாமனாரும் அவள்மீது மிகுந்த அன்பு செலுத்தினார்கள். அதனால் தாய் தந்தையர் இல்லாத குறை அவளுக்குத் தெரியவில்லை. அந்தப் பெரியவர்களிடமிருந்து தியானம், நோன்பு முதலியவற்றின் மகிமையை அவள் தெரிந்துகொண்டாள். அறியாப் பெண்ணாக இருந்த அவள், அறிவும் ஆனந்தமும் சுதந்திரமும் கலந்த சூழ்நிலையில் அடக்கமான ஒரு பெண்மணியாக வளர்ந்தாள்.

சத்தியவானுக்கு ஒரு மரண கண்டம் இருக்கிறது என்பதைச் சாவித்திரியும் அவளது மாமியார் மாமனாரும் வெளியே

காட்டிக்கொள்ளாமல் இருந்தாலும், அவர்களது உள்ளத்தை அது வாட்டிக் கொண்டே இருந்தது.

அந்தக் கொடிய நாளும் வந்தது. பொழுது விடிந்தது. எல்லா நாட்களையும் போலவே அன்றும் பறவைகள் கத்தின. தாய்ப் பசுக்கள் தங்களது கன்றுகளைக் கூவி அழைத்தன. சத்தியவானின் தாயும் தந்தையும் கவலை தோய்ந்த முகத்துடன் வழக்கம்போல தங்களது அலுவல்களில் ஈடுபட்டிருந்தனர். அடிக்கடி தங்களின் ஒரே மகனை ஏக்கத்தோடு பார்த்தனர். இதைக் காணக் காண சாவித்திரிக்குத் துக்கம் பொங்கியது. முகத்தைத் திருப்பிக்கொண்டாள். ஏதோ ஒரு பிரமையுடன் தன் வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

சத்தியவான் விறகு வெட்டக் காட்டுக்குப் புறப்பட்டதும், சாவித்திரியும் அவனுடன் செல்ல எழுந்தாள்.

"ஏன் சாவித்திரி? இது கடுமையான வெயில் காலம். காட்டிலே நீ எங்காவது தனியாகச் சென்று வழி தவறி விடுவாய்."

"இன்று நான் ஒரே இடத்தில் உட்கார்ந்து உங்களையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். சரிதானே?" என்றாள் சாவித்திரி, ஒரு புன்னகையுடன்.



"உன்னுடன் அவளும் வரட்டுமே" என்று சத்தியவானின் தாயாரும் திடீரென்று சொன்னாள்.

"ஓகோ. இன்று காலை மருமகளின் தொல்லை யில்லாமல் இங்கு இருக்கலாம் என்று பார்க்கிறீர்கள். அப்படித் தானே அம்மா?" என்று கண் சிமிட்டிக் கேட்டான் சத்தியவான்.

"இல்லை. நீ உன் பெண்டாட்டியை மகிழ்விப்பதற்காகத் தான் உன்னுடன் அனுப்புகிறேன். பாவம், அவளுக்கு இங்கே மகிழ்ச்சியூட்டுவதாக என்ன இருக்கிறது?" என்று பதில் சொன்னாள் மாமியார்.

"மகிழ்ச்சியா, அதுவும் காட்டிலா? இவளுக்கு நான் வைர முத்து மாலை வாங்கி ஒருநாள் போடப்போகிறேன். அப் போது மகிழ்ச்சியாக இருக்கும். ஆனால் காட்டுக்கு ஒரு நடை போய் வருவது அவ்வளவு மகிழ்ச்சியாக இராதே."

"என்ன, வைரமுத்துமாலையா!" என்று சாவித்திரி கேட்டு விட்டுக் கலகலவென்று சிரித்தாள். ஆனால், அவள் உள்ளத் திலே துக்கம் பொங்கிக் கொண்டிருந்தது. "இன்று காட்டிற்கு அழைத்துப் போங்கள், போதும். ஆனால் நினைவிருக்கட்டும். வைரமுத்துமாலை வாங்கித் தருவதாக இப்போது வாக்களித்து விட்டீர்கள். ஒரு நாள் கேட்டு வாங்கிக் கொள்வேன்."

சத்தியவானும் சாவித்திரியும் சிறு குழந்தைகளைப் போலச் சிரித்துக்கொண்டும் இதைத் தருவேன் அதைத் தருவேன் என்று ஒருவருக்கொருவர் வாக்களித்துக்கொண்டும் காட்டுக் குப் புறப்பட்டனர். "போய் வருகிறேன்" என்று சத்திய வான் சொல்லிக்கொண்டதும், அவன் தந்தையும் தாயும் வழக்கத்துக்கு மீறி நெடுநேரம் அவனையே பார்த்தனர். இதைக் கவனித்த சாவித்திரி தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவள் கண்களில் ததும்பிக் கொண்டிருந்த கண்ணீரை மற்றவர்கள் பார்த்துவிடாமல் மறைத்துக்கொண் டாள். "கடவுளே, இன்று எனக்கு எதையும் தாங்கும் இத யம் தருவாய். நல்லவர்கள், பெரியோர்கள், நாரதமுனிவர் ஆகியோரின் பிரார்த்தனையும் நல்வாழ்த்தும் துணை நிற்க வேண்டும்" என மனத்திற்குள் வேண்டிக்கொண்டாள்.

நடுக்காட்டிற்குள் சென்றனர். சத்தியவான் கவனமாகப் பார்த்து நல்லதொரு மரத்தைத் தேர்ந்தெடுத்தான். அதன் அடிப் பாகத்தைக் கோடரியால் பிளக்கத் தொடங்கினான். சாவித்திரி அருகிலே இருந்தாள். சத்தியவானுக்கு இன்று



மரணம் பாம்பால் நேருமோ, காட்டு விலங்குகளால் நேருமோ என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் அப்படி எதுவும் நேரவில்லை. புதரிலிருந்து புலி பாய்ந்து வரவும் இல்லை, புல் வெளியிலிருந்து பாம்பு சீறி வரவும் இல்லை. ஆனாலும் சத்தியவான் மரத்தில் ஒரு வெட்டு வெட்டியதும், திடீரென்று தன் தலையைப் பிடித்துக்கொண்டான். "சாவித்திரி! எனக்குத் தலைவலி" என்று முணுமுணுத்தபடி மயங்கி விழுந்தான்.



சாவித்திரி அவன் தலையை எடுத்துத் தன் மடி மீது வைத்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தாள். நடுக்காட்டில் உதவிக்கு யார் இருப்பார்கள்? இப்படி திடீரென்று கணவர் விழுந்து விட்டாரே என்ற அதிர்ச்சியில் சாவித்திரி கல்லாகச் சமைந்துவிட்டாள்.

அப்போது திடீரென்று வானத்துச் சூரியனை மறைத்தபடி ஏதோ நிழல் அவளது முகத்திலே விழுந்தது. ஒரு பெரிய கரிய உருவம் நிழல் போன்று அவள் எதிரே நின்றது. அந்த உருவம் கீழே குனிந்தது. கருமையான அதன் நீண்ட கரம் சத்தியவானின் குரல் வளையைப் பிடித்து ஒரு கணம் அழுத்தியது. சாவித்திரி நிமிர்ந்து பார்த்தாள். அதற்குள் அந்த நிழலுருவம் நகரத் தொடங்கி விட்டது.

"தயவுசெய்து நில். நான் உன்னுடன் பேச விரும்பு கிறேன்" என்று கதறிக்கொண்டே சாவித்திரி தொடர்ந்து ஓடினாள்.

நிழல் உருவம் நின்றது. சாவித்திரி அருகிலே சென்று உற்றுப் பார்த்தாள். அந்த உருவத்தின் முகத்தில் தெளிவும் கண்ணியமும் தெரிந்தன. உடனே அவளுடைய பயம் எங்கோ ஓடி மறைந்து விட்டது. மன அமைதியுடனும் தைரியத்துடனும் பேசினாள்.

"மன்னிக்கவேண்டும், தாங்கள் தான் யமதர்மராஜனா?"

"ஆமாம்."

"தங்களைப் பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக் கிறேன். இருந்தாலும், நான் தெரிந்துகொள்ளவேண்டியது நிறைய இருக்கிறது. இப்படித்தான் ஒவ்வொருவர் உயிரையும் எடுக்கத் தாங்களே நேரில் வருவீர்களா?"

"இல்லை. முக்கியமானவர்களுக்கு மட்டும்தான் வருவேன்" என்று கூறிக்கொண்டே யமன் நடந்தான்.

"என் கணவர் முக்கியமானவர் என்றால் இவ்வளவு இள மையில் அவர் உயிரைப் பறிப்பானேன்? அவர் ஒரு தவறும் செய்யவில்லையே."



"சாவு என்பது தண்டனை அல்ல."

யமனைத் தொடர்ந்து சாவித்திரியும் விரைந்து நடந்தாள். "தண்டனையில்லையா? சரி, அப்படியானால், யார் எப்போது இறக்கவேண்டும் என்பதைத் தீர்மானிப்பது யார்? பிறந்த வுடனேயே இறப்பதைப்பற்றி முடிவு எடுப்பது நியாயமாகுமா? அறிவுக்குப் பொருத்தமாகவும் அது இல்லையே" என்றாள்.

"இதையெல்லாம் புரிந்துகொள்வது சிரமம். நீ ஏன் என்னைத் தொடர்கிறாய்? திரும்பிப் போ" என்றான் யமன்.

"நான் உங்களையா தொடர்கிறேன்? என் கணவரை யல்லவா தொடர்ந்து வருகிறேன்" என்றாள் சாவித்திரி.

"இவன் இனிமேல் உன் கணவன் இல்லை."

சாவித்திரி சாந்தமாகக் கூறினாள். "அப்படியல்ல. அன்பு என்பது வாழ்க்கை முடிந்த பின்னும் கூட நீடிக்கும் என்று நான் நம்புகிறேன். நான் முதன் முதல் சத்தியவானைப் பார்த்தபோதே அவர் மீது அன்புகொண்டேன். முன்னரே தெரிந்தவர்களைப் பார்ப்பது போல நாங்கள் பார்த்துக்கொண் டோம். இந்தப் பிறவியில் நாங்கள் முன்னர் சந்தித்தது இல்லை. ஆகவே எங்களுடைய முற்பிறவியிலே நாங்கள் ஒருவரையொருவர் சந்தித்திருக்கவேண்டும். இப்படிப் பிறவி பிறவியாகத் தொடர்புகொண்டவரை இப்போது நான் விட்டுச் செல்வதா? மாட்டேன். அவரை அழைத்துச் செல்வதானால், என்னையும் அழைத்துச் செல்லுங்கள்."

மரணதேவதையான யமன் சிரித்தான். "மிகவும் பிடி வாதக்காரியாக இருக்கிறாயே! உன் பேச்சு எனக்குப் பிடித் திருக்கிறது. உனக்கு ஏதாவது வேண்டுமா, கேள். தருகிறேன். சத்தியவான் உயிரை மட்டும் கேட்டுவிடாதே! ஆமாம்."

சாவித்திரி சற்று யோசித்தாள்.

"ஐயா, எனது மாமனார் அநியாயமாய் அரசபதவியை இழந்திருக்கிறார். அவருக்கு மீண்டும் அரச பதவி கிடைக்க வேண்டாமா? நீங்களே சொல்லுங்கள்."

"அப்படியே ஆகட்டும்" என்று கூறிவிட்டு யமன் மிடுக்கு டன் நடந்தான். சிறிது நேரம் கழித்துத் திரும்பிப் பார்த்தான். சாவித்திரி அவன் பின்னாலேயே வந்துகொண்டிருந்தாள். கல்லிலும் முள்ளிலும் நடந்ததால் அவள் காலில் இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. திரும்பிப் பார்த்த யமனிடம்,

"மிகவும் வேகமாக நடக்கிறீர்களே!" என்ருள் அவள்.

"உனக்கு என்ன வேண்டும் சாவித்திரி?" என்ருன் யமன் அவளை உற்றுப் பார்த்தபடி. "சத்தியவானின் உயிர்தான் வேண்டுமென்ருல், மறந்துவிடு. அதுமட்டும் முடியவே முடியாது. யமன் சொன்ன சொல்லை மீறுவதும் இல்லை. எடுத்த உயிரைத் திரும்பக் கொடுப்பதும் இல்லை."

"ஓ, அப்படியா?" என்று கேட்டுக்கொண்டே சாவித்திரி சிந்தனையுடன் தலை அசைத்தாள். "ஆகா. அவ்வளவு நிச்சயமானுல், தாங்கள் செய்வதெல்லாம் நூற்றுக்கு நூறு சரியாகத் தான் இருக்கும். அப்படித்தானே?"

"சரியோ, தப்போ, அது எனக்கு முக்கியமல்ல."

"அப்படியா! அடடே! எனக்கு எல்லாம் அதிசயமாக இருக்கிறது. சிறு வயதிலிருந்தே 'இது நல்லது, இதைச் செய்; அது கெட்டது, அதைச் செய்யாதே' என்று பெரியவர்கள் சொல்லிச் சொல்லி என் மண்டையில் ஏற்றி விட்டார்கள். ஆனுல், இந்த உபதேசமெல்லாம் மனிதர்களுக்கு மட்டும்தான், தேவர்களுக்குத் தேவையில்லை போலிருக்கிறது."

"மரண விஷயம் என்பதே தனி."

"அது எப்படி? வாழ்வுக்குப் பொருந்துவது சாவுக்கும் பொருந்தும் அல்லவா?"

"நீ என்ன பொல்லாத பெண்ணுக இருக்கிருயே. எதைச் சொன்னுலும் அதைத் திரித்துக் கூறி, அறிவுக்குப் பொருத்தமானது போலச் செய்து விடுகிருயே."

"மன்னிக்கவேண்டும். அதையே வேறு விதமாக விண்ணப்பிக்கிறேன். வாழ்வு முழுவதும் எது சரி என்பதைத் தெரிந்து கவனமாக நடந்தால், நியாயமாக..........."

"நிறுத்து!" என்ருன் யமன். "நீ என்னைத் தொடர்ந்து வராதிருந்தால், உனக்கு நான் இன்னெரு வரம் தருவேன்."

"ஆகா! இன்னெரு வரமா? எவ்வளவு அன்பு. என்ன தாராளம்" என்று சாவித்திரி களிப்புடன் கூறினுள்.

"ஆனுல் நினைவிருக்கட்டும். சத்தியவான் உயிரை மட்டும் நீ கேட்கக்கூடாது."

"சரி. ஆனுல் இப்போது என்ன கேட்பது? ஓ! முதல் வரத்துடனேயே சேர்த்துக் கேட்டிருக்கவேண்டும். மறந்து விட்

டேன்.'' என்று சொல்லிச் சிறிது நிறுத்தினாள். பிறகு, "சரி. இப்போது கேட்கிறேன். என் மாமனாருக்கு மறுபடி அரச பதவியை மீட்டுத் தந்தீர்களே, அவரோ பார்வை இழந்தவர். பார்வை தெரியாதவருக்கு ராஜ்யம் கிடைத்து என்ன பயன்? அல்லது பார்வை தெரியாதவரால் ராஜ்யத்துக்கு என்ன பயன்?'' என்று கேட்டாள்.

"உன் மாமனாருக்கு மீண்டும் நன்றாகக் கண் தெரியும்'' என்றான் யமன் ஒரு சிரிப்புடன்.

இப்படிச் சொல்லிவிட்டு யமன் மேலே நடப்பதற்கு முன் சாவித்திரி மறுபடி பேசினாள். "நல்லவேளை, சரியான சமயத்தில் எனக்கு என் மாமனாரின் நினைவு வந்ததே!'' என்று பதிலுக்குச் சிரித்தாள், காரியமே கண்ணான சாவித்திரி. "இது மட்டும் நினைவு வரவில்லையென்றால் நான் என்ன கேட்டிருப்பேன், தெரியுமா?'' என்றாள்.

"என்ன கேட்டிருப்பாய்?''

"என் தந்தையாரின் ராஜ்யமும் என் மாமனாரின் ராஜ்யமும் செழித்து ஓங்கவேண்டும் என்று வரம் கேட்டிருப்பேன். இரண்டு ராஜ்யங்களுக்கும் நான் ஒருத்திதான் வாரிசு. நல்லவேளை, நான் இந்த வரத்தைத் தங்களிடம் கேட்கவில்லை. எதற்காகக் கேட்கவேண்டும். இந்த ராஜ்யங்களுக்கு செழிப்பும் மகிழ்ச்சியும் ஏன் அளிக்கப்பட வேண்டும்? மக்கள் மகிழ்ச்சியோடும் வளத்தோடும் வாழும்படி பார்த்துக்கொள்வது அந்தந்த நாட்டு அரசனின் கடமை, இல்லையா?''

"ஆமாம்.''

"அரசபதவி என்பது சாதாரணமா? மிக மிகப் பொறுப்பானது'' என்று பயபக்தியுடன் தலையை ஆட்டியபடி கூறினாள் சாவித்திரி. "அரண்மனையில் சுகமாக வாழ்வதும், தர்பார் நடத்துவதும், கவிஞர் கலைஞர்களை ஆதரிப்பதும், வரி வசூல் செய்வதும் மட்டுமா அரசனின் கடமை? சட்டம் ஒழுங்காகச் செயல்படுகிறதா, அதிகாரிகள் குடிமக்களைத் துன்புறுத்தாமல் இருக்கிறார்களா என்று பார்த்துக்கொள்ள வேண்டும். அண்டை ராஜ்யங்களுடன் சண்டை சச்சரவு இல்லாமல் அமைதியாக வாழவும், குடிமக்கள் எல்லாருக்கும் போதிய உணவும் உடையும் உறைவிடமும் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவும் வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக, தனது மக்களுக்குப் பேச்சு உரிமையும், குற்றம் குறைகளை எடுத்துச்

சொல்ல உரிமையும் இருக்கும்படி அரசன் பார்த்து கொள்ள வேண்டும். அப்படி இருப்பவன்தான் கொடுங்கோலனுகாமல் தப்புவான்'' என்று சொல்லிக்கொண்டே போனுள் சாவித்திரி.

அவள் வார்த்தையைக் கேட்ட யமன் 'என்ன உயர்ந்த கருத்துக்கள்!' என்று வியந்து மகிழ்ந்தான். "நீ சொல்வது சரி. நியாய வழியிலும் சுதந்திரப் பாதையிலும் நிலைத்த மரபுகளே சட்டத்தைவிட உயர்ந்தவை,'' என்ருன்.

"இப்படி இருப்பதற்கு, அரசவம்சம் வழிவழியாக, இடைவெளியில்லாமல் இருக்கவேண்டும் இல்லையா?'' என்று கேட்டாள் சாவித்திரி.

"ஆமாம். ஆமாம். தொடர்ச்சி விட்டுப்போனுல், குழப்பம், தடுமாற்றம் பதவிக்காகச் சண்டை எல்லாம் வந்துவிடுமே'' என்ருன் யமன். சாவித்திரி திடீரென்று மௌனமானுள். அவள் முகத்தில் சோகம் படர்ந்தது. சோர்வடைந்தாள். அவளது அழகிய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

'என்ன, என்ன!'' என்ருன் யமன் வியப்புடன்.

"தாங்கள் அறியாததா? தங்களுக்குத் தெரியாதது எதுவும் இல்லை. நான் என்ன நினைக்கிறேன் என்பதைத் தாங்கள் நிச்சயம் ஊகித்திருப்பீர்கள்?'' என்ருள் சாவித்திரி ஒரு பெருமூச்சுடன்.

யமன் யோசித்தான். அவள் மனத்தில் என்ன நினைத்திருக்கிருள்? இதை ஊகிப்பதா? புயலடிக்கும் காலத்தில் காற்று எந்தத் திசையில் வீசும் என்பதை ஊகிப்பது இதைவிட எளிது.

"நான் என்ன நினைத்தேன் என்ருல்......'' என்று தாழ்ந்த குரலில் சொன்னுள். "இதோ இரண்டு ராஜ்யங்கள். இரண்டுக்கும் என்னைத் தவிர வாரிசு கிடையாது. எனக்குப் பிறகு என் தந்தையின் ராஜ்யமும் என் மாமனுரின் ராஜ்யம் என்ன ஆகுமோ? தாங்கள் சொன்னபடி, தடுமாற்றம், குழப்பம், பதவிக்காகச் சண்டை, என்று எல்லாம் வந்துவிடுமே. இல்லையா? வீதிகளில் இரத்த ஆறு ஓடும். நகரங்கள் பாழடையும். அறுவடையை அறுக்க ஆள் இருக்காது. வீடு தோறும் பெண்களும் குழந்தைகளும் ஓலமிடுவார்கள்......''

"நிறுத்து!'' என்று கத்தினுன் யமன். "யமன் சொல்கிறேன். அப்படியெல்லாம் நடக்காது. நடக்கவிடமாட்டேன். உன் வம்சத் தொடர்ச்சி அறுந்துவிடாமல் இருக்க உனக்கு நூறு குழந்தைகளை வரமாக அளிக்கிறேன்,'' என்ருன்.



யமன் இப்படிச் சொன்னுரோ இல்லையோ, சாவித்திரியிடம் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது அவளது தொய்ந்த தோள்கள் நிமிர்ந்தன. பெருமூச்சும் கண்ணீரும் மாயமாய் மறைந்தன. யமன் எதிரே ஓர் அற்புத அரசகுமரியாய், கம்பீரமாய் நின்ருள் அவள்.

''த்சொ. த்சொ! உங்கள் மரபு ஒன்றைத் தகர்க்க நானே காரணமாக இருக்கிறேனே,'' என்ருள், ராஜகம்பீரத்துடன்.

''எந்த மரபை?'' என்று விழிப்போடு கேட்டான் யமதர்மன்.

''அதுதான், யமன் எடுத்த உயிரைத் திரும்பக் கொடுப்பதில்லை என்னும் மரபை. நீங்கள் இப்போது எனக்கு நூறு பிள்ளைகளை வரமாகக் கொடுத்துவிட்டீர்கள். என் கணவர் உயிரை எடுத்துச் சென்றுவிட்டால் எனக்கு ஏது குழந்தை?''






யமன் தன் தோல்வியை கௌரவத்துடன் ஒப்புக்கொண்டான். இருவரும் மறுபடி காட்டை நோக்கி நடந்தார்கள். "அடடா, இப்போதுதான் தெரிகிறது. இதில் நாரதரின் விஷமம் ஏதோ இருக்கிறது. சத்தியவான் உயிரை எடுக்க நானேதான் வரவேண்டும் என்று அவர்தான் தூண்டினார்" என்றான் யமன்.

அப்புறம் சொல்லவேண்டுமா? யமதர்மராஜன் சாவித்திரிக்குக் கொடுத்த எல்லா வரங்களும் நிறைவேறின. சத்தியவான் தூக்கம் நீங்கி எழுவதுபோல் புத்துணர்ச்சியுடன் எழுந்தான். கரிய உருவம் கொண்ட ஒரு விசித்திர மனிதனுடன் நெடுந்தூரம் போவது போல அவன் கனவு கண்டிருந்தான். அதை சாவித்திரியிடம் சொல்லத் துடித்தான் அவன்.

சத்தியவான் தந்தை இழந்த பார்வையையும் ராஜ்யத்தையும் மீண்டும் பெற்றார். சாவித்திரிக்கும் வைரமுத்துமாலை கிடைத்தது. ஆனால், அது யமன் வரம் இல்லாமலே கிடைத்தது!

இந்த மாறுதல்களெல்லாம் நிகழ்ந்து, குதூகலமான அமளியெல்லாம் அடங்கியபின் ஒருநாள் சாவித்திரியின் தந்தையான அரசர் அசுவபதி, மகளைத் தம் அருகிலே அழைத்து, "எல்லாம் சரி. யமனை எதிர்த்து வாதாட உனக்கு எப்படியம்மா தைரியம் வந்தது?" என்று விசாரித்தார்.

சாவித்திரி மெல்லச் சிரித்தாள். "எனது மாமியாரை நான் முதலில் சந்தித்தபோது, பல சோதிடர்கள் சேர்ந்து என் கணவரின் ஜாதகத்தைத் தயாரித்தது பற்றிக் கூறினார்கள். அவர்களிலே ஒருவர் பிறரைவிட அறிவாளியாம். அவர் பலன்சொல்லும்போது, 'சத்தியவானுக்கு மரண அபாயம் உண்டு. இருந்தாலும் மரணத்தைவிட வலிமை வாய்ந்த ஒரு சக்தியைக் கொண்டு அதைத் தடுக்க முடியும்' என்று சொல்லியிருந்தாராம். அந்தச் செய்தியே எனக்கு நம்பிக்கை அளித்தது. தைரியமூட்டியது. மரணத்தைவிட வலிமையான சக்தி என்னிடம் இருந்ததே— அதுதான் என் கணவரிடம் நான் கொண்ட அன்பு!" என்றாள்.



## ஏழு நாள் எச்சரிக்கை

அஸ்திநபுரத்து அரசனின் பெயர் பரீட்சித்து. அவன் வேட்டையாடுவதிலே மிகவும் வல்லவன். வேட்டையாடும்போது உள்ளக் கிளர்ச்சியும் உற்சாகமும் ஏற்படும் என்பதற்காக மட்டுமே அவன் வேட்டையாடுவதில்லை. காட்டுப் பகுதியில் வாழும் மக்கள் நலமாக, மகிழ்ச்சியோடு இருப்பதற்கும் கொடிய மிருகங்களை வேட்டையாடி வந்தான்.

ஒருநாள் அரசன் வேட்டையாடும்போது, ஒரு மான்மீது அம்பு எய்துவிட்டான். அடிதான் பட்டதே தவிர, அது இறந்துவிடவில்லை. வேட்டை விதிகளின்படி மிருகங்களைக் கொல்லலாமே தவிர, அவற்றை முடமாக்கக் கூடாது. ஒரு மிருகத்தைக் காயப்படுத்தி, அது வேதனையால் துடிதுடிக்கும்படி செய்வது மனிதத் தன்மையற்றது, பாவம் என்றே கருதப்பட்டது. ஆகையால் அரசன் அந்த மானை கொன்று, அதன் வேதனையைத் தீர்த்துவிடவேண்டும் என்று முடிவு செய்தான். அதைத் துரத்திக்கொண்டு காட்டுக்குள் சென்ருன். காட்டுக்குள் அவன் வெகுதூரம் சென்றதால், அவனு



டன் வந்த மனிதர்களைவிட்டுப் பிரிந்துவிட்டான். அவனுக்கு ஒரே களைப்பு, தாகம், பசி. ஆனாலும் அந்த மானைக் கொன்று அதன் வேதனையைப் போக்காமல் திரும்புவதில்லை என்ற உறுதியுடன் தொடர்ந்தான்.

திடீரென்று அடர்ந்த மரங்களிடையே ஒரு திறந்த வெளியைக் கண்டான். அங்கே ஒரு பெரியவர், பசுக்களுக்குத் தீனி வைத்துக்கொண்டிருந்தார். அரசன் அவர் அருகே சென்றான். "ஐயா, நான் அபிமன்யுவின் மகன். இந்த நாட்டின் அரசன். அடிபட்ட மான் ஒன்றைத் தேடி வருகிறேன். அது இந்த வழியாக வந்ததா? நீங்கள் பார்த்தீர்களா?" என்று கேட்டான்.

அந்தப் பெரியவர் ஒரு மாமுனிவர். தவவலிமை மிக்கவர். பெயர் சமிகர். அன்று அவருக்குப் பேசா விரதம். அதனால் அவர் அரசர் கேட்டதற்குப் பதில் சொல்லவில்லை. 'ஏன் இப்படி மௌனமாய் இருக்கிறார் இந்த முனிவர்' என்று அரசனுக்கு முதலில் புரியவில்லை. 'ஓகோ. இவருக்குக் காது கேளாது போயிருக்கிறது' என்று நினைந்து, உரத்த குரலில் விசாரித்தான். அப்போதும் முனிவர் பதில் எதுவும் கூறாமல் மௌனமாக அரசனைப் பார்த்தார். அப்போது ஒரு பசு, பால் குவளையை உதைத்தது. அந்த ஒலிகேட்டு முனிவர் சட்டெனத் திரும்பி, பால் கீழே ஊற்றாதபடி தடுத்தார். அதனால் அவர் செவிடு இல்லை என்பதைத் தெரிந்துகொண்டான் அரசன்.

அரசனுக்கு ஒரே கோபம். "காட்டில் வாழ்பவர்களுக்கு என்ன திமிர்?" என்று ஆத்திரப்பட்டான். 'கடைசியாகக் கேட்போம்' என்று எண்ணி மறுபடியும் உரத்த குரலில் மானைப் பற்றி விசாரித்தான். "உடனே தகுந்த பதில் சொல்லாவிட்டால் அரசனாகிய நான் என்ன செய்வேனோ தெரியாது" என்றும் எச்சரித்தான். சமிகர் தெரியாது என்று தலை அசைத்தார். ஆனால் அரசனோ அதைத் தவறாகப் புரிந்துகொண்டான். முனிவர் பதில் சொல்ல மறுக்கிறார் என்று நினைத்துவிட்டான். முனிவர் கண்களில் இருந்த பரிவையும்

அவன் கவனிக்கவில்லை. 'ஐயோ, உதவ முடியவில்லையே' என்ற அவரது ஏக்கத்தையும் உணரவில்லை.

குழந்தைத்தனமான ஆத்திரம் கொண்டான் அரசன். உடனே அவரை எப்படியாவது அவமானப்படுத்தவேண்டும் என்று சுற்றுமுற்றும் பார்த்தான். அருகிலே ஒரு பாம்பு செத்துக் கிடந்தது. உடனே தன் வாளை உருவினன். கூர்மையான அதன் நுனியால் அதைச் சரேலென்று எடுத்தான். அப்படியே அதை முனிவர் மீது வீசினன். அது அவர் கழுத்தில் ஒரு மாலை போல விழுந்தது. அரசன் ஏளனமாகச் சிரித்தான். உடனே முனிவர் சீறி விழுவார், ஒருவேளை தன்னைச் சபித்துவிடுவார் என்றே அவன் நினைத்தான்.

சமிக ரிஷி ஒன்றுமே செய்யவில்லை. மன்னனைப் பெருங் கருணையுடன் பார்த்தார். அரசன் வெட்கமடைந்து, தலை குனிந்து, அவ்விடம் விட்டு அகன்றுன்.





அரசனுக்கும் முனிவருக்கும் தெரியாமல் இதையெல்லாம் ஒருவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் பெயர் கிருஷா. அரசன் அவசர அவசரமாகத் திரும்பிச் சென்றதும் கிருஷா நேராகத் தன் தோழன் சிருங்கியிடம் சென்றான். சிருங்கி வேறு யாருமல்ல. முனிவர் சமிகரின் குமாரனேதான்.

சிருங்கி அப்போது பச்சிலைகளைப் பறித்துக்கொண்டிருந்தான். கிருஷா அவனிடம் பேச்சுக் கொடுத்தான்: "சிருங்கி, காட்டில் வாழும் நாம் அனைவரும் கடவுளுக்கு அடுத்தபடி அரசருக்குத்தான் கடமைப்பட்டவர் என்று ஒரு நாள் சொன்னாயல்லவா?"

"ஆமாம்" என்றான் சிருங்கி, பச்சிலைகளைப் பறித்துக் கொண்டே.

"அந்த அரசன் நம்மைப் பற்றிக் கவலைப்படாவிட்டாலும் கூட, நம்மை அவமதித்தாலும் கூட, அவனுக்கு நாம் மரியாதை காட்டவேண்டுமா?" என்று கேட்டான் கிருஷா.

"அரசன்—பரீட்சித்து அரசனையா சொல்கிறாய்? அந்த அரசன் காட்டிலே வாழ்ந்து வருகிறவர்களை அவமதிக்கமாட்டானே. அப்படி ஏன் செய்யப் போகிறான்?"

கிருஷா ஒரு குறும்புக்காரன். எனவே குறும்புடன் சொன்னான்: "நானே பார்த்தேன் என்று வைத்துக்கொள்ளேன். என் எதிரே, முனிவர் ஒருவரை அவன் அவமதித்தான் என்கிறேன்."

"நான் நம்பமாட்டேன்" என்றான் சிருங்கி.

"சொல்வதற்கு ஆதாரம் இருக்கிறது. காட்டட்டுமா?"

"ஆதாரமா?" சிருங்கி பொறுமை இழந்தான். "ஏன் புதிர் போடுகிறாய்? விஷயத்தைச் சொல்லு. நீ அளக்கும் கதையைப் புரிந்துகொள்கிறேன்."

"கதையா? நீயே வந்து பார்த்துக்கொள்" என்று அவனைக் கையோடு அழைத்து வந்தான். தியானத்தில் அமர்ந்திருந்த சமிகரைக் காட்டினான். செத்த பாம்பு அப்போதும் அவர் கழுத்தில் இருந்தது.



"ஆ. என் தந்தையின் கழுத்திலே ஒரு பாம்பு" என்று பதறிக்கொண்டே ஓடினான் சிருங்கி. ஆனால் தோழன் கிருஷா அவனைப் பிடித்து இழுத்தான்.

"அது வெறும் செத்த பாம்புதான். நமது மாமன்னர், நம்மை யெல்லாம் காப்பாற்று பவர், கடவுளுக்கு அடுத்தபடியாக இருப்பவர் என்றெல்லாம் நீ சொல்லுவாயே, அந்த பரீட்சித்துவே சற்று முன்பு உன் தந்தையின் கழுத்தில் அணிவித்தார் இந்தச் செத்த பாம்பை. இப்படி அவமானப் பட உன் தந்தை செய்த பிழை என்ன தெரியுமா? அடிபட்ட ஒரு மானைப் பற்றி அரசர் கேட்டார். உன் தந்தை பதில் சொல்லவில்லை. நான் பார்த்துக் கொண்டிருந்தேன். அரசர் இரைந்து கத்தினார். பிறகு, இந்தச் செத்த பாம்பை வாளால் எடுத்து இவர் மீது வீசினார். ஆகா, அரசர் வாள் வீச்சில் வல்லவர்தான்! அந்தப் பாம்பு அப்படியே மாலை போலே இவர் கழுத்தில் விழுந்திருக்கிறது. இவ்வளவையும் நான் என் கண்களால் பார்த்தேன்."

"ஏண்டா, பார்த்தேன் என்கிறாயே. அரசரிடம் இன்று அப்பாவுக்கு மௌனவிரதம் என்று சொல்வதற்கு என்ன?"

"என்னது! அரசர் உருவிய வாளுடன் நின்றுகொண்டிருக்கிறார், முகத்தில் ஒரே கோபம். அவர் எதிரே நான் போவதா? என் கழுத்தைச் சீவியிருப்பார்" என்றான் கிருஷா.

சிருங்கி தன் தந்தையையே ஒரு கணம் பார்த்தான். தந்தை மீது அவனுக்கு மிகவும் பாசம். அவரது மகிமை பற்றி ஒரு பெருமை. "என் தந்தையை அவமதித்துவிட்டானே அந்த அரசன்! இவரது முகத்திலே பளிச்சிடும் கண்ணியத்தை

அவனால் காணமுடியவில்லையா? இவரது கண்களில் தவழும அமைதி அவனுக்குத் தெரியவில்லையா?'' என்று நினைத்தான்.

"அரசர்களுக்குக் கண்ணிருக்கிறதே தவிர, நல்லவற்றைப் பார்க்கும் பார்வை இல்லை'' என்றான் கிருஷா ஆத்திரத்தோடு. அவனுக்கு அரசர்கள் என்றாலே பிடிக்காது.

தனது தந்தையின் கழுத்திலே செத்த பாம்பு தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கப் பார்க்க சிருங்கிக்குக் கோபம்



கோபமாக வந்தது. அவனால் கோபத்தைத் தாங்க முடிய வில்லை. அது ஒரு சாபமாக வெடித்தது.

"அவன் அரசனாக இருக்கட்டும். வணக்கத்துக்குரிய என் தந்தையின் கழுத்தில் செத்த பாம்பைப் போட அவனுக்கு என்ன துணிச்சல்! இதனால் என் தந்தையை மட்டும் அவன் அவமதிக்கவில்லை. காட்டில் தவம் புரியும் முனிவர்கள் அனைவரையுமே அவமதித்துவிட்டான். அவனுக்கு முனிவர்கள் என்ன தவறு செய்தார்கள்? அவனை நான் இப்போது சபித்து விடுகிறேன். தன் இழி செயலால் அஸ்தினாபுரத்து அரசவம்சத் துக்குப் பழி தேடிக்கொண்ட இந்த அரசன் இன்றிலிருந்து ஏழு நாட்களில் மரணமடையட்டும். அதுவும் தட்சகன் என்ற பாம்பு மன்னனால் நாகலோகம் செல்லட்டும்!"

சிருங்கி இவ்வாறு கடுமையாகச் சபிக்கவும், தியானத்தில் ஆழ்ந்திருந்த அவன் தந்தை திடீரென்று கண்விழித்தார். பதறிப்போய் தன் மைந்தனைப் பார்த்தார். விபரீதம் நேர்ந்து விட்டதே என்ற கவலையில் தம் மௌனவிரதத்தையும் மீறிப் பேசினார்: "குழந்தாய், சிருங்கி, என்னடா செய்துவிட்டாய்! பரீட்சித்து அரசனை சபித்துவிட்டாயே. அவன் எவ்வளவு நல்லவன், நம்மையெல்லாம் பாதுகாப்பவனல்லவோ அவன்? இந்தக் காட்டில் நாம் அமைதியாக வாழ வகைசெய்தவ னல்லவா அவன்? அவனைச் சபிக்கலாமா? உனக்கு என்ன பைத்தியம் பிடித்துவிட்டதா? தவ சீலர்கள் இப்படித்தான் நடந்துகொள்வார்களா? உன் கோபத்தாலும் சாபத்தாலும் என்னென்ன விபரீதங்கள் நேருமோ தெரியவில்லையே! பரீட்சித்தைச் சபித்தாய். அதனால் அவனுக்கு மட்டுமா அழிவு நேரும்? இந்த நாடே நிலைகுலைந்து போகுமே! சூழ் நிலை எதுவாயிருந்தாலும் இது தவறுதான். அதுவும் அத்தினா புர அரசன் பரீட்சித்துக்கு இப்படி ஒரு சாபமா? இது மிகப் பெரிய தவறல்லவா?" என்றார்.

சிருங்கி தலைகுனிந்தான்.

"ஐயோ. இந்தச் சாபத்தை நீ மாற்றவும் முடியாதே. உனக்கு உள்ள சக்தியின்படி, நீ சொல்வது எல்லாம் பலித்து விடுமே! அதனால்தான் நீ பொறுமையாக இருக்கவேண்டும், உன் வாயைத் திறக்கு முன்பு நூறு முறை யோசிக்கவேண் டும் என்று நான் அடிக்கடி எச்சரித்து வருகிறேன்" என்று, வருத்தப்பட்டார் அவன் தந்தை.



சமிகர் சற்றுநேரம் சிந்தனை யில் ஆழ்ந்தார். பிறகு சரேலென எழுந்தார். "குருமுகியை என் னிடம் உடனே அனுப்பு. அவனை நான் உடனே அரண்மனைக்கு அனுப்பி அரசனுக்கு இந்தச் சாபத்தைப் பற்றி அறிவிக்க வேண்டும். அரசனை முன் ஜாக்கிர தையாக இருக்கும்படி எச்சரிக்க வேண்டும்" என்றார்.

குருமுகி என்பவர் சாப விவ ரத்தை வந்து கூறவும் பரீட்சித்து அரசன், "அடடா. அன்று முனி வரது மௌன நாளா? தெரியாது போனேனே" என்று வருந்தி னன். "இதை நானே ஊகித்துக் கொண்டிருக்கவேண்டும். தவறு என்னுடையதுதான். ஆகா. சமிகர்தான் எவ்வளவு கருணை யுள்ளவர். இந்தச் சாபத்தைப் பற்றி எனக்கு முன்னதாகத்

தகவல் அனுப்பியிருக்கிறரே. அவருக்கு என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவியுங்கள்'' என்றன்.

இவ்வாறு கூறி குருமுகியை அனுப்பிவிட்டான். உடனே தன் மந்திரிமாரை அழைத்து, என்ன செய்வது என்று ஆராய்ந்தான். அதற்கு முன் காசியபர் என்பவருக்கு உடனே வரச்சொல்லி ஆள் அனுப்பினன். அவர் மிகக் கொடிய விஷப் பாம்புக் கடியையும் குணப்படுத்தும் சக்தி பெற்றவர்.

அமைச்சர்கள் முடிவுப்படி சிற்பிகளும் கட்டிடக் கலைஞர்களுமாக அரண்மனைக்கு வந்தார்கள். ஒரே நாளில் அற்புதமான ஒரு கட்டிடம் கட்டினர்கள். அரண்மனை வெளித் திடலில் ஒற்றைத் தூண் ஒன்றை உயர எழுப்பினர்கள். அதன் உச்சியில் ஒரு தனி அறையைக் கட்டிக் கொடுத்தார்கள். அங்கே அரசன் வசிக்கத் தொடங்கினன். தூணைச் சுற்றிக் கீழேயும் மேலே அறை வாயிலிலும் ஆயுதம் தாங்கிய பல வீரர்கள் காவல் இருந்தனர். அரசன் அருகே ஒரு புழு கூடச் செல்ல முடியாதபடி பார்த்துக்கொண்டார்கள். அரசனின் குடும்பத்தாரையும், மந்திரிகளையும் தவிர வேறு யாரையும் உள்ளே அனுமதிக்கவில்லை.

அரசன் உத்தரவுப்படி காசியபர் அரண்மனை நோக்கி விரைந்துகொண்டிருந்தார். வழியில் ஒரு கிழவன் சோர்ந்து பரிதாபமாகக் கிடப்பதைக் கண்டார்.

''யாரப்பா நீ? ஏன் இவ்வாறு வாடி யிருக்கிருய்?'' என்று விசாரித்தார்.



"ஐயா, வாழ்விலே அநியாயத்தைப் பாருங்கள். தாங்கள் அரண்மனைக்குப் போகிறீர்கள். உங்களுக்கு உபசாரத்துடன் வரவேற்புக் கிடைக்கும். ஆனல், நானும்தான் அங்கே போக விரும்புகிறேன். ஆனல் என்னை உள்ளே விடமாட்டார்களே" என்று கிழவன் பெருமூச்சுவிட்டான்.

"நீ அரசனைப் பார்க்கவேண்டுமா?"

"ஆமாம்."

"என்னை அங்கு அழைக்கக் காரணம் உண்டு. பாம்பு அரசஞகிய தட்சகன் இருக்கிருனே அவன் அரசனைக் கடித்து விடுவான் என்ற பயம் இருக்கிறது. அப்படிக் கடித்தால் அரசனைக் காப்பாற்றவேண்டும். அதற்காகவே என்னை அழைத்திருக்கிருர்கள். ஆமாம், உனக்கு என்னப்பா அங்கே வேலை?"

"எனக்கா? அவனைக் கொல்வதுதான் என் வேலை!" என்று கூறி அந்தக் கிழவன் தன் உண்மை உருவத்தை வெளிப்படுத்தினன். அவன் யார் தெரியுமா? அவன்தான் பாம்பரசன் தட்சகன்!

"என்ன இது சங்கடம்?" என்று கூறிஞர் காசியபர். "நீயோ அரசனைக் கொல்லப்போகிருய். நானே அரசன் உயிரைக் காப்பாற்றப்போகிறேன். நாம் ஒன்ருகப் போவதா, தனித் தனியாகப் போவதா?"

"உன்னல் அரசனை எனது விஷக்கடியிலிருந்து காப்பாற்ற முடியும் என்று நினைக்கிருய்?" என்று கேட்டான் தட்சகன்.

"ஆமாம்" என்ருர் காசியபர் தயக்கமின்றி.

"எங்கே பார்ப்போம், இதோ இந்தச் செடியில் நான் விஷம் ஏற்றுகிறேன். அது உடனே பட்டுப்போகும். அதை மறுபடி துளிர்க்கச்செய்ய உன்னல் முடியுமா பார்ப்போம்" என்ருன் தட்சகன்.

உடனே பாம்பரசன் தன் விஷ நாக்கால் அந்தச் செடியை தீண்டினன். சில நொடிகளில் செடி கருகிச் சாம்பலாயிற்று.

"பார்க்கலாம் உன் திறமையை" என்று காசியபரைப் பார்த்துச் சொன்னன் தட்சகன்.

காசியபர் ஒரு பிடி சாம்பலைக் கையில் எடுத்துக் கண்ணை மூடித் தியானம் செய்தார். பிறகு எடுத்த இடத்திலேயே அதை வைத்து மண்ணைப்போட்டு மூடினர். சில நிமிடங்களில் அந்த இடத்தில் முளை கிளம்பியது. அதில் இரண்டு

கொழுந்து இலைகள் தெரிந்தன. பிறகு மெல்லிய தண்டு நேராக எழுந்தது. இலை குலுங்க வளர்ந்து, முன்பு இருந்ததைப் போல அவர்கள் எதிரே அது அதே அளவுச் செடியாகி நின்றது!

தட்சகன் இதை ரசித்துப் பார்த்தான். ஆயினும் அவனுக்கு இது ஒன்றும் பெரிய விந்தையாகத் தோன்றவில்லை. இதைப்போல் பல விந்தைகளையும் அற்புதங்களையும் நிகழ்த்தும் சித்தர்களை அவன் பார்த்திருக்கிறான்.

''இந்த வித்தையில் உன் திறமையைப் பாராட்டுகிறேன். ஆனால் பரீட்சித்து மன்னன் விஷயத்தில் மட்டும் எனக்கு எதிராக ஒன்றும் செய்யாதே'' என்று காசியபரிடம் கேட்டுக் கொண்டான்.

''ஏன்?'' என்று காசியபர் விசாரித்தார்.

''முதலில் இதற்கு பதில் சொல். விதியை எதிர்ப்பது நமக்குச் சரியா?''

"இல்லை" என்றார் காசியபர் உடனே. "ஆனால் பரீட்சித்து விதியை முடிக்க ஒரு சாபம்தானே வந்திருக்கிறது?"

"நீ நினைப்பது தப்பு" என்றான். "அரசன் அற்பாயுளில் இறந்துபோவதற்காக என்னை யாரும் இங்கே அனுப்பவில்லை.



விதிப்படி எல்லாம் நடக்கவே நான் வந்திருக்கிறேன். யமனே என்னை அனுப்பியிருக்கிறுன். யமனது கணக்குப் படி அரசன் இப்போது இறக்கவேண்டும். சமிகரின் மகன் சிருங்கியின் சாபம் என்பது, வரப்போகும் முடிவை முன்ன தாகவே தெரிவிக்கிறது. அவ்வளவுதான்.''

காசியபர் அப்படியே சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். "பரீட்சித்து இன்னும் ஏழு நாளில் இறந்தாகவேண்டுமா? அப்படியானுல், சிருங்கி சபிக்காமல் இருந்தால்கூட அவனுக்கு மரணம் நிச்சயம்தானு?''

''சந்தேகமில்லாமல்.''

''அப்படியானுல் எனக்கு ஏன் வம்பு?'' என்று சொல்லி காசியபர் தமது ஆசிரமத்துக்குத் திரும்பிவிட்டார்.

தட்சகன் நெடுநேரம் யோசித்து, அரசனின் அறைக்குள் செல்ல திட்டம் ஒன்று தீட்டினுன். சிருங்கி சாபமிட்ட ஏழாவது நாள்தான் அவனுக்கு அந்த யோசனை தோன்றியது. அவன் அவசரமாகச் சில நாகலோகவாசிகளை அழைத்து, அவர்களுக்குச் சில கட்டளைகளிட்டான்.

''அரசனை நன்கு பாதுகாத்துவருகிறுர்கள். நாம் தந்திரத் தால்தான் நமது நோக்கத்தை நிறைவேற்றமுடியும்'' என்று எச்சரித்தான்.

இதனிடையில் பரீட்சித்து மன்னனும் அவன் குடும்பத் தாரும் மந்திரிமார்களும், ஏழு நாளில் ஆறு நாள் நல்லபடி யாகக் கழிந்துவிட்டதே என்ற மகிழ்ச்சியில் இருந்தார்கள். ஏழாவது நாளும் இதோ முடியப்போகிறது. இன்று மாலை சூரியன் மறைந்ததும் ஏழு நாள் பூர்த்தியாகிவிடும். அதற்கும் சில நாழிகைப் பொழுதுதான் இருக்கிறது. "காசியபர் ஏன் வரவில்லை'' என்று அரசனுக்குப் புரியவில்லை. இருந்தாலும் நல்ல காலமாக, ஏராளமான பாதுகாப்பு ஏற்பாடுகள் செய் திருப்பதால், காசியபர் வந்துதானுகவேண்டும் என்பதில்லை. இப்படி அரசன் நினைத்துக்கொண்டிருக்கையில் மாலை மங்கும் நேரத்தில் ஏழெட்டு துறவிகள் ஒற்றைத் தூண் அருகே வந் தார்கள். "நெடுந்தூரத்திலிருந்து வருகிறோம். அரசனுக்குப் பழமும் மலர்களும் கொண்டு வந்திருக்கிறோம்'' என்றுர்கள்.

காவலாளிகள் அந்தத் துறவிகளின் உடலிலோ உடை யிலோ பூச்சி புழு ஒன்றும் இல்லையே என்று கவனமாகப் பார்த்தபிறகு அரசனிடம் அனுப்பினர்.

"சாபக்கெடு அநேகமாக முடிந்துவிட்டது. துறவிகளை உள்ளே விடுவதால் என்ன நேர்ந்துவிடப் போகிறது. இவர்கள் அரசனை ஆசீர்வதிப்பார்கள்" என்று நினைத்தனர் காவலாளிகள். காவி அணிந்த துறவிகள் அரசனிடம் பழங்களை அளித்துவிட்டு உடனே புறப்பட்டுவிட்டார்கள். தமது உண்மை உருவமான பாம்பு வடிவத்தை அடைந்து, பாதாளத்துக்குச் சென்றுவிட்டனர்.

சூரியன் மறையும் நேரம் நெருங்கியதும் அரசனது அறையிலே யாவரும் ஒரே மகிழ்ச்சியுடன் இருந்தனர். "இதோ சாபம் முடியும் நேரம் வந்துவிட்டது. அரசர் ஆபத்திலிருந்து தப்பிவிட்டார்" என்று மகிழ்ந்தார்கள்.

அரசன் மந்திரிகளையும் குடும்பத்தாரையும் அழைத்தான். "சூரியன் மறைந்துகொண்டிருக்கிறான். துறவிகள் கொடுத்த பழங்களை எல்லாருமாகத் தின்ன வாருங்கள்" என்றான்.

எல்லாருமாகப் பழத்தட்டைச் சூழ்ந்தனர். அவரவருக்குப் பிடித்தமான பழத்தை எடுத்துக்கொண்டனர். அரசன் ஓர் அழகிய மாம்பழத்தை ஒரு கடி கடித்தான். இனிப்பாக இருந்தது. இன்னும் ஒரு கடி கடித்தான். மாங்கொட்டையருகே ஒரு புழு இருப்பதை அப்போது பார்த்தான். நல்ல பழத்தில் புழு இருப்பது வழக்கம்தானே! அதனால் அதைப் பெரிதாகப் பாராட்டாமல், அரசன், தன் கையில் அந்தக் கடித்த மாம்பழத்துடன் சூரியனைப் பார்த்தபடி நின்றான்.

"இனி தட்சகனாவது இங்கே வருவதாவது!" என்றான் அரசன். அப்படியே புழுவைப் பார்த்தான். விளையாட்டாக, 'என்ன புழுவே, உங்கள் பாம்பரசன் வரவேண்டுமே, ஏன் வரவில்லை? உனக்குத் தெரியுமா? உனக்கு எங்கே தெரியப் போகிறது. தட்சகன் அல்லவா இதற்கு பதில் சொல்லவேண்டும்!"

பரீட்சித்து அரசன் இப்படிச் சொன்னானோ இல்லையோ, அவன் கண் பிதுங்கும்படி ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அந்தச் சிறு புழு கிடுகிடு என்று பெரிதாக வளர்ந்தது. நாகராசனாகிய அந்தப் பாம்பு தன் நீண்ட படத்தை எடுத்து ஆடியது. சூரியனின் கடைசிக் கிரணம் மறையும் நேரத்தில் தன் விஷ நாவால், மின்னலைப் போல் அரசனைத் தீண்டிவிட்டது!



## உபமன்யு கற்ற பாடம்

வெகு காலத்திற்கு முன்பு அயோத்தியில் தௌம்யர் என்று ஒரு குரு இருந்தார். அவரது குருகுலத்தில் பல மாணவர்கள் கல்வி கற்றனர். அவர்களில் ஒருவன் உபமன்யு. உபமன்யு வும் மற்ற மாணவர்களும் தங்கள் குருவுடன் கிராமத்தின் எல்லையிலிருந்த ஆசிரமத்தில் வாழ்ந்துவந்தனர்.

குருகுலத்தின் கட்டுப்பாடுகள் கடுமையானவை. அவற்றுள் முக்கியமானது படிந்து நடப்பது. ஆசிரியர் என்ன சொன்னாலும் மறு பேச்சின்றிக் கேட்டாகவேண்டும். குரு குலத்தின் மற்றொரு பழக்கம் என்ன தெரியுமா? கிராமத்தார் மாணவர்களுக்கு உணவு அளிப்பார்கள்; மாணவர்கள் கொண்டுவரும் உணவை மாணவர்களும் ஆசிரியர்களும் பகிர்ந்து கொள்வார்கள்.

ஆசிரமத்தில் எல்லாருக்கும் தேவையான பழமரங்கள் இருந்தன; பாலுக்கும் மோருக்கும் பசுக்கள் இருந்தன. மாண வர்கள் அங்கே கற்றுக்கொண்டவை தர்மசாஸ்திரமும் போர் வித்தையும். பிற்காலத்தில் திருமணம், அந்திமக்கிரியை, யாகம் போன்ற சடங்குகளைச் செய்வதற்கு விரும்பியவர்கள் வேதங்களையும் உபநிடதங்களையும் கற்றார்கள்.



ஆசிரமத்தின் குரு, வெறும் பாடம் சொல்லிக்கொடுப்பவ ராக மட்டும் இருக்கவில்லை. எல்லா மாணவர்களுக்கும் தந்தை யும் தாயுமாக இருந்து கவனித்துக்கொண்டார். எல்லாருமே வயதில் சிறியவர்கள். பெற்றோர்கள் அந்தக் குழந்தைகளை அவரது பொறுப்பில் விட்டிருந்தனர். மாணவர்களின் அறிவு வளர்ச்சியில் அக்கறை காட்டியது போல அவர்கள் ஆரோக் கியமாக வளரும்படியும் அவரே பார்த்துக்கொண்டார். அவர் களிடம் நல்ல பழக்கம் படியும்படி பார்த்துக்கொண்டார். மனத்தில் நல்ல எண்ணங்களே நிலவும்படி பழக்கப்படுத் தினார். நல்ல குணசாலிகளாக விளங்கச் செய்தார். எல்லா ரும் கட்டுப்பாடு நிரம்பியிருக்கும்படி பார்த்துக்கொண்டார்.

மாணவர் எவருக்கேனும் நோய் நொடி வந்தால் பரிவுடன் கவனித்துவருவார். யாரேனும் தவறுசெய்தால் தண்டனையும் அளிப்பார். அவன் அரசகுமாரனானாலும் சரி. பெற்றோர் அனைவருமே குருவிடம் மரியாதை காட்டினார்கள்.

ஒரு நாள் குரு தௌம்யர் உபமன்யுவை அழைத்தார். "உபமன்யு, பெரிய யாகம் நடத்தும் அரசனுடன் நீ சில நாள் இருக்கவேண்டும். இது என் ஆசை. அரசனுக்குத் தேவை யான உதவிகளைச் செய்துவா. அப்படியே, யாகம் நடத்தவும் வேதியர்களிடமிருந்து கற்றுக்கொள்" என்றார். உபமன்யு உற்சாகத்துடன் புறப்பட்டு, அரச னின் அந்தரங்க உதவியாளன் ஆனான். கல கலப்பாகப் பழகி, கடினமாக உழைக்கும் உப மன்யுவை எல்லாருக்கும் பிடித்திருந்தது.



போன வேலை முடிந்து உபமன்யு குருகுலம் திரும்பியதும் தௌம்யர் அவனை விசாரித்தார்.

"உபமன்யு, இத்தனை நாளாக நீ தினம் உபவாசம் இருந்தாயா?"

"இல்லையே!" என்றான் உபமன்யு, வியப்புடன்.

"அதுதான் பார்த்தாலே தெரிகிறதே. உடம்பு பெருத்திருக்கிறதே. அரண்மனையில் சுவையான சாப்பாட்டை வயிறு முட்டத் தின்றாய் போலிருக்கிறது!"

"இல்லை, குருதேவா." என்றான் உபமன்யு. "வழக்கம் போல நான் கிராம மக்கள் அளிக்கும் உணவைத்தானே உண்டுவந்தேன். இதற்காக தினம் மூன்று மைல் தூரம் அரண்மனையிலிருந்து நடந்து வந்தேனே."

"அப்படியா? நீ அந்த உணவுடன் குருகுலத்துக்கு வந்து நான் பார்க்கவில்லையே" என்றார் தௌம்யர்.

அப்போதுதான் உபமன்யுவுக்குத் தன் தவறு புரிந்தது. கிராமத்தில் அவன் பெற்ற உணவை அவன் குருவிடம் சமர்ப்பித்திருக்கவேண்டும். கையால் தலையில் அடித்துக் கொண்டு, ஆசிரம விதியை மீறியதற்காக குருவிடம் மன்னிப்பு வேண்டினான்.

அன்று அவன் கிராமத்திற்குச் சென்றபோது, கிடைத்த உணவு அனைத்தையும் கொண்டுவந்து குருவிடம் சமர்ப்பித்தான். உபமன்யுவின் மன உறுதியைச் சோதிக்க எண்ணினார் குரு. எனவே, உணவு முழுவதையும் தாமே எடுத்துக்



கொண்டு, தலை அசைத்து, அவனை அனுப்பிவிட்டார். உபமன்யு நாள் முழுவதும் காத்திருந்தான். யாரும் அவனுக்கு உணவளிக்கவில்லை. பசியுடன் படுக்கச் சென்றான்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு மறுபடியும் தௌம்யர் இவனை அழைத்தார். உபமன்யு பசியால் வாடி, கண் இடுங்கி இருப்பான் என்று நினைத்தார். ஆனால் எப்போதும்போல் உபமன்யு உற்சாகத்துடனும், பொலிவுடனும் வருவதைக் கண்ட ஆசிரியர் வியந்தார்.

தௌம்யருக்கு ஒன்றும் புரியவில்லை. "உபமன்யு, இரண்டு நாளாக நீ கொண்டுவரும் ஆகாரத்தை எல்லாம் நானே எடுத்துக்கொண்டு விடுகிறேன். உனக்கு ஒன்றும் மிச்சம் வைப்பதில்லை. நீ பசியால் மயங்கிக் கிடப்பாய் என்று நினைத்தால், நீ சோர்வில்லாமல் இருக்கிறாயே. எப்படி?" என்று விசாரித்தார்.

"குருவே, நான் தினம் இரண்டாவது முறை கிராமத்தாரிடம் போய் எனக்கு வேண்டிய ஆகாரம் பெறுகிறேன்" என்றான் சீடன்.

அதிருப்தியுடன் குரு முகம் சுளித்தார்.

"என்ன? எத்தனை முறை சொல்லியிருக்கிறேன், மறந்து விட்டாயா? ஊராரிடமிருந்து ஒரு நாளைக்கு ஒரு முறைதானே உணவு பெறலாம்? ஊம்!"

"ஆமாம்" என்றான் உபமன்யு, ஈனக்குரலில். "ஆனால் பசியில் இந்தக் கட்டளையை நான் மறந்துவிட்டேன்."

"ஊராருக்குத் திரும்பத் திரும்ப நம்மை ஆதரிப்பதுதானா வேலை? நம்மைப்போல் வேறு எத்தனையோ பேர்களை அவர்கள் கவனிக்கவேண்டும். அப்படி இருக்க, கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடையாமல் நீ பேராசையுடன் அவர்களை மீண்டும் ஆகாரம் கேட்டாயா, அழகுதான்! நீ தவறுசெய்துவிட்டாய். போ! ஆசிரமத்து மாடுகளை மேய்த்து வா. அப்போது நான் சொன்னதைப் பற்றியும் சிந்தித்தபடி இரு" என்றார் குருதேவர்.

உபமன்யுவுக்குத் தண்டனை தொடர்ந்தது. அவன் வழக்கம் போல ஊராரிடம் வசூலித்த உணவை தினமும் ஆசிரியரிடம் கொடுத்தான். அப்புறம் அது அவன் கண்ணில் படாது. மூன்று நாள் ஆயிற்று. தௌம்யர் காத்திருந்தார். சீடனே உணவு தேடி வருவான் என்று காத்திருந்தார். ஆனால் அவன் வரவில்லை. வராததோடு மட்டுமல்ல, இன்னும் உற்



சாகமாகத் தன் வேலைகளில் ஈடுபட்டது போலக் காணப்பட்டான். ஆசிரியர் மறுபடியும் அந்த மாணவனை அழைத்து விசாரித்தார்.

"என்னப்பா, எப்படி இருக்கிறாய்? காட்டுக்குப் பசுக்களை ஓட்டிச் சென்றாயே, சிரமமாக இருந்ததா?" என்று கேட்டார்.

"இல்லையே குருதேவா" என்றான் உபமன்யு, உற்சாகமாக.

"இல்லை, மூன்று நாளாக ஆகாரம் இல்லாமல் இருக்கிறாயே என்பதற்காகக் கேட்டேன். பசியால் கால் தடுமாறுகிறதா? தலை சுற்றுகிறதா?"

"இல்லையே. எனக்குப் பசிக்கவே இல்லையே" என்றான் சீடன்.

"என்ன? பசிக்கவில்லையா? பசியை வெல்லும் வித்தை உனக்குத் தெரிந்துவிட்டதா?" என்று வியப்புடன் கேட்டார் குருதேவர்.

உபமன்யு பயத்தால் நடுங்கிவிட்டான். தான் மறுபடி ஒரு தவறு செய்துவிட்டதை உணர்ந்தான். தயக்கத்தோடு, "குருதேவா, மேயப்போன பசுக்களின் பாலை நான் தினமும் குடித்துவந்தேன்" என்றான்.

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். சிறுவன் பரிதாபமாக விழித்தான். குருவுக்கோ வருத்தம் ஒருபுறம், கோபம் ஒரு புறம்.

கடைசியில் சாந்தமாகச் சொன்னார்: "உபமன்யு, நீ பொய்யே பேச மாட்டாய் என்பதை நான் அறிவேன். நீ ஒழுங்காகவும் படிப்பில் கவனமாயும் இருக்கிறாய். நீயும் உற்சாகமாக இருக்கிறாய். மற்றவருக்கும் உற்சாகம் ஊட்டுகிறாய். ஆனால், உன்னிடம் ஒரு குறை இருக்கிறது. இப்போதே அதை நீக்காவிட்டால் வாழ்க்கை முழுவதும் அதனால் கஷ்டப்

படுவாய். நீ உன் வயிறே கதியாக இருக்கிறாய். இதனால் நீ குருகுலத்துக் கட்டளைகளை மறந்து மீறுகிறாய். பசியுடன் இருக்கும்போது நீ நடந்துகொள்வது உன் கையில் இல்லை. நான் பல முறை உன்னிடம் சொல்லியிருப்பது போல், எவன் தன் மன வலிமையால் உடல் ஆசைகளை அடக்கமுடியாமல் தவிக்கிறானோ, அவன் எந்த இழி நிலைக்கும் இறங்கி விடுவான்; அவன் வேடிக்கை பார்க்கப் போவதற்காக ஒரு பொய் சொல்வான். பசி என்பதற்காகத் திருடி விடுவான். நல்ல உடை வேண்டும் என்பதற்காக ஏமாற்றி விடுவான். இதெல்லாம் பற்றித் தெரிந்துகொள்ளத்தான் உன் தந்தை உன்னை என்னிடம் அனுப்பியிருக்கிறார், இல்லையா உபமன்யு?"

குருதேவர் வருத்தந்தோய்ந்த குரலில் இவ்வாறு மெல்லக் கூறவே உபமன்யு வெட்கமடைந்தான். அவனைத் திட்டினாலோ அடித்திருந்தாலோ கூட அவ்வளவு ரோசம் வந்திருக்காது. மறுபடி இவ்வாறு தன் மீது குற்றம் காண முடியாதபடி நடந்து கொள்ளவேண்டும் என்று அவன் தீர்மானித்தான்.

குருவை நேருக்கு நேர் பார்க்கவே கூசினான். தலை குனிந்தவாறே, "தாங்கள் ஆணையிடும் வரை நான் ஒரு கவளம் கூடச் சாப்பிடமாட்டேன்" என்றான்.

உபமன்யு அன்றும் மறுநாளும் ஒன்றுமே சாப்பிடவில்லை. மூன்றாவது நாள், பசுக்களை மேய்ந்து கொண்டிருந்தபோது, தாங்கமுடியாத பசியாக இருந்ததால், ஒரு செடியின் தழைகளைப் பறித்துத் தின்றான். அதுவோ ஒரு மருந்துப் பச்சிலை. செடியில் இருந்த ஒரு நெடி அவனைத் தாக்கி, அவன் கண் பார்வையை பாதித்தது. உபமன்யுவின் கண் கெட்டுவிட்டது. சரியாகப் பார்க்கமுடியவில்லை. அவன் பயந்துபோனான். தட்டுத் தடுமாறி, மாலை இருட்டுவதற்குள் குருகுலம் திரும்ப வேண்டும் என்று முயன்றான். ஆனால் வழி தெரியவில்லை. பாதை தவறிவிட்டது. ஆழமான ஒரு பள்ளத்தில் தவறி விழுந்தான். இருட்டில், தனிமையில், பயத்துடன் அழுது கொண்டிருந்தான். காடெங்கும் கரிய இருள் சூழ்ந்தது.



இரவு வந்ததும் உபமன்யு வராததைக் கவனித்த குரு மற்ற மாணவர்களை விசாரித்தார்.

"அவன் வழக்கம்போல மாடு மேய்க்கப் போனான். மாடுகள் திரும்பியும் அவன் திரும்பவில்லை" என்றான் ஒருவன்.

"ஐயோ, இருட்டிவிட்டதே இன்னும் அவனைக் காணோமே" என்று கவலையுடன் குருவே அவனைத் தேடிப் புறப்பட்டார்.

மாணவரும் குருதேவரும், அவன் வழக்கமாகப் போகும் பாதைகளில் போய்த் தேடிப் பார்த்தனர். பிறகு, காட்டுப் பாதைகளில் சென்று, உரக்க, "உபமன்யு, எங்கே இருக்கிறாய்? என் குரல் கேட்கிறதா?" என்று கூவினார் குரு.

பள்ளத்தில் விழுந்த அதிர்ச்சியில் உபமன்யு லேசான மயக்கமடைந்திருந்தான். குருவின் குரல் கேட்டதும் திடுக்கிட்டு, தன் நினைவு வரப்பெற்றான். "குருவே! நான் இங்கே இருக்கிறேன். பள்ளத்தில் விழுந்துவிட்டேன்" என்று பதில் குரல் கொடுத்தான்.

எல்லாரும் ஓடிப் போய் அவனைக் கண்டுபிடித்தார்கள் உபமன்யுவின் உடை கிழிந்திருந்தது. உடலெங்கும்



முள் குத்தியிருந்தது. கன்னத்தில் கண்ணீர் வழிந்தபடி இருந்தது.

“இந்தப் பள்ளத்தில் ஏன் உட்கார்ந்திருக்கிறாய்?” என்று குருதேவர் கேட்டார்.

தன் வேதனையையும் ஆத்திரத்தையும் அடக்கிக்கொண்டு உபமன்யு கூறினான்: “ஐயா, நான் வேண்டுமென்றே இங்கே வந்து உட்காரவில்லை. நான் இங்கே தவறி விழுந்து விட்டேன். நான் ஒரு செடியின் இலையைத் தின்றேன். உடனே என் கண்களில் நீர் கொட்டியது. பிறகு கண் மங்கியது. அப்புறம் குருடாகிவிட்டேன்” என்று கூறி பசுக்கள் பத்திரமாகத் திரும்பினவா?” என்று விசாரித்தான்.

“பசுக்கள் பத்திரமாகத் திரும்பிவிட்டன” என்று உபமன்யுவின் தோழர்கள் பதிலளித்தார்கள். “நீ தின்ற செடி எப்படி இருந்தது, விவரித்துச் சொல்” என்று குருதேவர் கேட்டார். பிறகு, “நீ இங்கேயே இரு. பார்வை வேண்டுமென்று கடவுளை வேண்டிக்கொள். தீவிரமாகத் தவம் செய்தால் கடவுள் உனக்குப் பார்வையை அளிப்பார். அல்லது இந்தக் குறையைத் தாங்கிக்கொள்ளும் தைரியத்தை அளிப்பார். அப்புறம் நீ ஆசிரமத்துக்குத் திரும்பு” என்றார்.



உபமன்யுவுக்கு, இதுவும் ஒரு சோதனை என்பது புரிந்தது. ரோசம் மிக்க அவன் அழுவானு? அல்லது மண்டியிட்டு 'இரக்கம் காட்டுங்கள்' என்று கெஞ்சுவானு? குருதேவர் சொன்னதைக் குனிந்த தலை நிமிராமல் கேட்டான். கைகட்டி, பத்மாசனம் போட்டு தவம் செய்ய அமர்ந்தான். பிற மாண வர்களுடன் குருதேவர் ஆசிரமத்துக்குத் திரும்பிவிட்டார்.

காட்டிலே ஒரே இருட்டு. எத்தனையோ விசித்திரமான, பயங்கர ஒலிகள். ஆனல் உபமன்யு சற்றும் பயப்படவில்லை. "இந்தத் தண்டனையை தைரியத்துடன் தாங்கிக்கொள் வேன்" என்ற உறுதியுடன் கடவுளை நோக்கித் தவம் செய் தான். முதலில், "இறைவா, என்னைக் காப்பாற்று. கண் பார்வையைத் திரும்பக் கொடு. அன்புவடிவானவனே, முட்டாள்தனமான என் செயல்களை மன்னிப்பாய். இன்று நான் கற்ற பாடத்தை மறக்கவே மாட்டேன்" என்று கதறினன்.

வெகு விரைவில் உபமன்யு தியானத்தில் ஆழ்ந்து விட் டான். சிறிது நேரத்தில் அவன் அருகே அசுவினிதேவர்கள் என்னும் இரட்டையர் சோதி வடிவில் தோன்றியது போலி ருந்தது. அவர்கள்தான் வானுலக மருத்துவர் என்று குரு சொல்லியிருந்தது அவனுக்கு நினைவு வந்தது.

"எங்களை அழைத்தாயா உபமன்யு! உனக்கு என்ன வேண்டும்?" என்று அசுவினி தேவர்கள் கேட்டனர்.

"எனக்குப் பார்வை திரும்ப வேண்டும்" என்று வேண்டி னன் உபமன்யு. அசுவினி தேவர்கள் புன்னகையுடன் அவ னிடம் அற்புதக் குளிகையைக் கொடுத்தனர். உபமன்யு அதை வாங்கி, வாயில் போட எடுத்தான். உடனே தன் சபதம் நினைவுக்கு வந்தது. தின்ன நினைத்த குளிகையைக் கையிலே மூடிக்கொண்டான். "தேவர்களே, நீங்கள் அளித்த இந்தக் குளிகையை நன்றியோடும் மகிழ்ச்சியோடும் ஏற்றுக் கொள்கிறேன்" என்று அடக்கமாகச் சொன்னன்.

"அது சரி. அதை விழுங்குவதற்கென்ன? என்ன தயக் கம்?" என்று கேட்டனர் தேவர்கள்.

"ஏன? என் ஆசிரியர் அனுமதி இல்லாமல் ஒன்றுமே தின்னமாட்டேன்" என்று பதிலளித்தான் சிறுவன்.

"மருந்து சாப்பிடக் கூடவா அனுமதி வேண்டும்" என்ற னர் அஸ்வினி தேவர்கள், அவனைக் கூர்ந்து பார்த்து.



"மருந்தானால் கூட குருதேவர் சொன்னால்தான் சாப்பிடு வேன்" என்றான் உபமன்யு உறுதியுடன்.

அவன் இப்படிச் சொன்னதும் அசுவினி தேவர் என்னும் இரட்டையர் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். புன்னகையுடன் கைகளை உயர்த்தி உபமன்யுவை ஆசீர் வதித்து, மீண்டும் வானில் எழும்பி நட்சத்திரங்களாயினர்.

பொழுது புலர்ந்தது. மரங்களில் பறவைகள் கீச்சிட்ட ஒலி கேட்டு உபமன்யு விழித்தான். என்ன விந்தை, அவனுக்குப் பார்வை திரும்ப வந்துவிட்டது! அப்பப்பா. மீண்டும் பார்க்க முடிந்ததே என்ற மகிழ்ச்சியில், சுற்று முற்றும் ஒவ்வொரு பொருளையும் கண்குளிர நோக்கினான். நீல வானத்தில் வெள்ளை மேகத்திலே ஒரு புது அழகைக் கண்டான். மலர் களிலே ஓர் இனிமையை உணர்ந்தான். மரத்தின் கிளைகள் ஊடே வீசும் சூரிய ஒளியில், சிறு செடி மொட்டு மலர்வதை ரசித்தான். 'அடடா ஒரே மரத்திலே எத்தனை வகைப் பச்சை வண்ணங்கள்!' என்பதை உணர்ந்து வியந்தான். இயற்கை யின் இந்த அழகுகளையெல்லாம்—இத்தனை நாள் கண்ணிருந் தும் காணாத அழகுகளை—மணிக்கணக்கில் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலத் தோன்றியது.

நேரமாகிறது, குருகுலத்திற்குத் திரும்பவேண்டும். நிமிர்ந்து உட்கார்ந்தான். தன் கைப்பிடிக்குள் ஏதோ இருப் பதை உணர்ந்தான். "ஓகோ, அசுவினி தேவர் தந்த அற் புதக் குளிகை" என்பது நினைவுவந்தது.

கையைப் பிரித்தால், அந்த அற்புதக் குளிகை எங்கேயா வது விழுந்துவிடுமோ என்ற கவலையுடன், மூடிய கையுடனே குருகுலத்தை நோக்கி ஓடினான். அவனுக்குப் பசிக்கவே இல்லை. சோர்வே இல்லை. பயமும் இல்லை. மனத்திலே ஒரு



மகிழ்ச்சி, உடலிலே ஒரு சுறுசுறுப்பு. நேரே குருதேவரிடம் சென்றான்.

"குருதேவா. நான் வந்துவிட்டேன். அசுவினி தேவர்கள் எனக்குப் பார்வை அளித்துவிட்டார்கள். அவர்கள் நான் தின்பதற்கு ஏதோ கொடுத்தார்கள்" என்று சொல்லி ஆசிரியரை நிமிர்ந்து பார்த்தான். "ஆனால் நான் தின்னவில்லை." என்று கூறி, தன் கையைப் பிரித்தான். கையிலே இருந்தது என்ன தெரியுமா? ஒரு பிடி மண். காட்டு மண்.

உபமன்யுவுக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன, எல்லாம் கனவா?" என்று ஆசிரியரைக் கேட்டான்.

"கனவா? உன்னைப் பொருத்தவரை அது கனவே அல்ல. உண்மைதான். பார்வை மீண்டும் கிடைத்தது போல உண்மைதான்" என்றார் குருதேவர். பிறகு கனிவுடன், "பார்வை திரும்பியதுபோல, பசியும் வந்ததா? வா. நேற்றிரவு இங்கே யாரும் ஒன்றும் சாப்பிடவில்லை. தூங்கவும் இல்லை. வா. பழைய சோறும் தயிரும் தின்னலாம் வா" என்றார்.

# பகனை வென்ற பீமன்

புகழ் பெற்ற பாண்டவர்களில் ஒருவன் பீமன். பீமனுக்கும் அவன் சகோதரர்களுக்கும் சொந்தமான நாட்டை மீட்பதற்காக, கௌரவ சகோதரர் நூறு பேருடன் செய்ததே பாரத யுத்தம். சண்டை நடந்து பாண்டவர்கள ஆட்சியைக் கைப் பற்றினர்கள். அதற்கு முன், கௌரவர்கள் எத்தனையோ வழிகளில் பாண்டவரை அழிக்க முயன்றனர்.

அப்படி ஒரு சோதனையில் தப்பிய பாண்டவர் ஐவரும் தமது தாயுடன் ஏகசக்கரம் என்ற அமைதியான ஊருக்கு வந்து சேர்ந்தார்கள். பலவாறு அலைந்ததால் அமைதியாக இங்கேயே சில நாள், கௌரவர் கண்ணில் படாமல் இருக்கலாம் என்று நினைத்தார்கள். எங்கே தங்குவது என்று யோசித்தபோது, அன்பே வடிவான ஒரு கிராமவாசி, இவர்களைத் தன் வீட்டில் வந்து இருக்கும்படி அழைத்தான். இவர்களும் நன்றியுடனும் மகிழ்ச்சியோடும் அவன் குடும்பத்துடன் வாழ்ந்து வரலானர்கள்.



ஒரு நாள் பீமனும் அவன் தாய் குந்தியும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தபோது யாரோ அழும் குரல் கேட்டது. என்ன என்று அறிய குந்தி சரேலென எழுந்து பார்த்தாள். வீட்டுக்காரர் அறையிலிருந்து பேச்சுக்குரல் கேட்டது.

“ஐயோ இனி என்ன செய்வது?” என்று வீட்டுக்காரர் சொல்லிக்கொண்டிருந்தார். “நாம் இங்கேயே சாகவேண்டியதுதான். குடும்பத்தில் யாரை விட்டு விடுவது? நான் அப்போதே சொன்னேன், வேறு எங்கேயாவது போகலாம் என்று. நீதானே பிடிவாதமாக, ‘இது நான் பிறந்த இடம், இங்கேயே சாகும்வரை இருப்போம்’ என்ருய். உன் இஷ்டப்படி நடக்கட்டும். நீ மட்டுமா. நாலு பேரும் இங்கேயே சாகலாம்” என்று பொரிந்து தள்ளினுர்.

இது ஒன்றும் புரியாமல் குந்தி கேட்டுக்கொண்டே இருந்தாள். இப்போது வீட்டுக்காரரின் மனைவி பேசினுள்.

“நாமும் நம் குழந்தைகளும் ஒன்ருகச் சாவது என்று இருந்தால் வேறென்ன வேண்டும்? ஆனுல் ஒருவரே ஒருவர் இறந்தால் போதுமே. இதைப் பற்றி நான் யோசித்துப் பார்த்தேன். இந்த பச்சைக் குழந்தைகள் நமக்காக பலியாக முடியாது, அவர்கள் போய்விட்டால் அப்புறம் யார்? நீங்களோ நானுேதான். நீங்கள் போய் விட்டாலோ சிறு குழந்தைகளும் நானும் எப்படி வாழ்வோம்? எனக்கும் அவர்களுக்கும் சோறு கிடைக்கச் செய்ய என்னுல் முடியுமா? நேர்மையுடன் உயிர் வாழும்படியான வேலை ஏதாவது எனக்குக் கிடைக்குமா? பையனை என்னுல் ஆளாக்கமுடியுமா, பெண்ணுக்குக் கல்யாணம் கட்டித் தரமுடியுமா? அதனுல் குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பை உங்களிடம் விட்டு விட்டு நான் போகிறேன், பலியாக. இங்கே இருப்போம் என்று நான் தானே ஆசைப்பட்டேன்? அதற்கு தண்டனையாக இருக்கட்டும். இனி நமக்குள் இது பற்றிச் சச்சரவு வேண்டாம்.”

பாவம், அன்பான கிராமவாசியின் குடும்பத்தில் ஏதோ ஓர் அபாயம் வர இருக்கிறது என்பது குந்திக்குப் புரிந்தது. ஏதாவது உதவ முடியுமா என்று பார்ப்போம் என்று நினைத்து ஓர் அடி எடுத்து வைத்தாள். அப்போது ஒரு சிறு பெண்ணின் குரல் கேட்டு மறுபடி நின்ருள். தான் பலியாகத் தயார் என்ருள் சிறுமி. அப்பாவும் அம்மாவும் தம்பியை வளர்த்துப் பெரியவனுக்கட்டும் என்ருள் அந்தப் பெண்.

அதைக் கேட்டதும் ஒரு கணமும் தயங்காமல் குந்தி அவர்களிடம் சென்ருள்.

“இதோ பாருங்கள், ஏதோ வருத்தமாக இருக்கிறீர்கள் என்று தெரிகிறது. என்ன விஷயம் என்று சொல்லுங்கள். என்னல் முடிந்த உதவி செய்கிறேன். உங்களை பயமுறுத்தும் ஆபத்தை நாம் எல்லோருமாகச் சேர்ந்து முறியடிப்போம்” என்ருள் குந்தி.

“தாயே. அன்பாகப் பேசுகிருய். உன் ஆறுதல் வார்த்தை சரிதான். ஆனல் எனது கவலை மனிதராலே தீர்க்கமுடியாத கஷ்டம் அம்மா. கடவுள்தான் கண்திறக்க வேண்டும்” என்று சோகக் குரலில் சொன்னர் குடும்பத்தலைவர்.

“என்ன விஷயம்? முழுவதும் சொல்லுங்கள்” என்ருள் குந்தி.

“சொல்கிறேன்” என்று அந்த மனிதர் குந்தியை முதலில் அமரச் செய்தார். பிறகு அதே சோகக் குரலில் தொடங்கினர்.

“இந்த நாட்டின் அரசன் ஒரு சோனி. ஆட்சி புரியத் தெரியாத அசடு. முழு முண்டம். அந்தச் சோம்பேறி அவனுக்காக ஆளும்படி ஒவ்வொரு ஊருக்கும் அவனுடைய ஆளை வைத்திருக்கிருன். இந்த ஊருக்கும் பக்கத்து ஊர்களுக்கும் அதிகாரியாக இருப்பவன் ஒரு பூதம். ‘பகன்’ என்று



பெயர். அவன் மனிதர்களையே தின்பவன். மலை போல இருப்பான். பரட்டைத் தலையன். நெருப்பை கக்கும் சிவந்த கண்ணன். அவன் நடந்தால் நிலம் நடுங்கும். அவன் உறுமினால் வானில் பறவைகள் சிதறிப் போகும். இந்த ஊர்க்காரர் நன்ருக வாழ, நாங்கள் தினமும் அவனுக்கு ஒரு வண்டி சாதமும் இரண்டு எருமையும் ஒரு மனிதனையும் அனுப்பவேண்டும். ஊரிலே முறை வைத்து இந்தப் பூதத்தை உபசரித்து வருகிருேம். நாளை எங்கள் வீட்டு முறை. வீட்டிலே நாலு பேர் இதிலே யார் பலியாவதற்குப் போவது என்று விவாதிக்கிருேம்.''

இந்த பயங்கரக் கதையைக் கேட்ட குந்திக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை இருந்தாலும் அவர்களுக்கு உதவ வேண்டுமென்பதிலும் அவள் தீவிரமாக இருந்தாள். சற்று நேரம் யோசித்துவிட்டு, ''எனக்கு ஒரு வழி தோன்றுகிறது, கேளுங்கள்'' என்ருள்.

''ஏதாவது சொல் அம்மா. நாங்கள் குழம்பிப் போயிருக்கிருேம். சிந்திக்க முடியவில்லை. நீயே சொல்லு.''

''கேளுங்கள். உங்களுக்கோ ஒரே பிள்ளை. அவனும் சிறு குழந்தை. எனக்கு வலுவான பிள்ளைகள் ஐந்து பேர் உண்டு. அவர்களில் ஒருவன் சோற்று வண்டியையும் எருமைகளையும் எடுத்துப் போகட்டும்'' என்ருள் குந்தி.

இதைக் கேட்டதும் அந்த வீட்டுக்காரர் அதிசயத்து நடுங்கி, தன் காதைப் பொத்திக்கொண்டார்.

''தாயே, நாங்கள் உன் யோசனையை ஒப்புக்கொள்ள மாட்டோம். உன் பிள்ளை ஒருவனை பலிகொடுத்து, எங்களைக் காப்பாற்றுவதா? அபசாரம்!''

குந்தி அவரைத் தேற்றி, மறுபடி சொல்லுவாள் :

''ஐயா, என் பிள்ளைகளைப் பற்றி உமக்குத் தெரியாது. என் பிள்ளைகளில் ஒருவனை மனத்தில் கொண்டே இப்படிச் சொன்னேன். உங்கள் மகன்மீது நீங்கள் அன்பு காட்டுவது போலவே என் மகன் மீதும் எனக்கு ஆசை இருக்கிறது. அவனை நான் சாக அனுப்பவில்லை. அவன் பூதத்தை வென்று விடுவான் என்ற நம்பிக்கையில் அனுப்புகிறேன். என் மகன் உருவத்திலே ராட்சதன்போல இருப்பான். வாயுதேவனைப்போல் வேகமானவன் அவன். அவனையே பகனிடம் அனுப்புகிறேன்.''

குந்தி தன் அறைக்கு வந்து, பாண்டவர்களிடம் பகனைப் பற்றிச் சொன்னாள். "அவனைச் சந்திக்க உங்களில் ஒருவரை அனுப்புவதாகச் சொல்லியிருக்கிறேன்" என்றாள். பீமன் சிரித்தான். "நான்தானே அம்மா போகவேண்டும்? நீ என்னை மனதில் வைத்துக்கொண்டுதானே அவரிடம் பேசி யிருப்பாய்? சரி, நான் போகிறேன். காரியம் முடிந்ததென்று வைத்துக்கொள்" என்றான்.

அடுத்த நாள், பீமன் எழுந்தான். பகனுக்கு வைத்த சாப்பாட்டு வண்டியுடன் பகன் வாழ்ந்த காட்டுக்குப்போனான். பகன் தன் வீட்டிலிருந்து எட்டிப் பார்த்தபடி இருந்தான். கொழுக்கு மொழுக்கு என்று இருந்த பீமனை வெகு தூரத் திலேயே பார்த்து, "நமக்கு நல்ல வேட்டைதான்" என்று மகிழ்ந்தான். 'ஆனால் என்ன இது, மாடுகளைக் காணோமே' என்று புரியாமல் விழித்தான். அடுத்த நிமிஷம் பீமன் செய் தது அவனுக்கு வியப்பூட்டியது.

பீமன் தரையிலே அமர்ந்து, எதிரே பெரிய வாழை இலையை விரித்துக் கொண்டான். வண்டியிலிருந்த சோற் றைக் குவியலாகக் கொட்டித் தின்ன ஆரம்பித்தான். பகன் பார்த்தபடி இருக்க, சோற்றையும் கறியையும் பிற உண்டி களையும் கப கபவென்று வயிற்றுக்குள் தள்ளினான் பீமன்.

காடே அதிரும் கர்ஜனையுடன் பகன் பாய்ந்தான். பீம னுக்கு சில கஜ தூரங்கள் முன் வந்து நின்றான். ஆனால் பீமன் இதைச் சட்டை செய்தவனாகவே தெரியவில்லை. தடித்த புளியமரம் போன்ற பகனின் கால்களை அலட்சியமாகப் பார்த்த படி பீமன் இன்னொரு கூடை சோறு எடுத்துச் சாப்பிட லானான். பகன் இன்னும் நெருங்கினான்.

"யாரடா அது முட்டாள், பகனின் கோபத்தைக் கிளறு வது?" என்று கர்ஜித்தான். "நீ எனக்கு ஆகாரமாக அனுப்பப் பட்டவன், தெரியுமாடா. எங்கேடா என் மாடுகள்?"

இன்னொரு கூடை சோறும் கறியும் தின்றுவிட்டு பீமன் சுருக்கமாக பதில் சொன்னான்: "மாடு கிடையாது."

"மாடு கிடையாதா? அப்படி என்றால்?" பகனின் கோபம் எல்லை மீறிக்கொண்டிருந்தது.

"ஊரிலே மாட்டுப் பஞ்சம்" என்றான் பீமன். "ஊரிலே பசுவும் மாடும் தேவை. குழந்தைகளுக்குப் பால் வேண்டுமே."



கோபத்தால் உதடு துடிக்க, பகன் பீமன் மேல் பாய்ந்தான் பீமன் அசையவில்லை. உடனே பகன் பீமனின் பின்னால் போய் அவனைச் சரேலென்று தூக்கப் பார்த்தான். ஊஹூம். பலமெல்லாம் சேர்த்து இழுத்தாலும் அந்தப் பாண்டவ வீரனை அசைக்கவே முடியவில்லை. பிறகு பகன் தன் ராட்சதக் கைகளால் பீமனின் கழுத்தில் வெட்டுவதுபோல அறைந்தான்.

ஏதோ கொசு கடிப்பது போல அலட்சியமாக இருந்தான் பீமன். ''ருசித்துச் சாப்பிடும்போது தொந்தரவு செய்யாதே, போ'' என்று சொன்னான்.

பகனுக்கு ஒரே ஆச்சரியம். பீமன் ஒரு வண்டிச் சோற்றையும் தின்று தீர்க்கும்வரை கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

பரபரப்பே இல்லாமல் பீமன் கை கழுவிக்கொண்டான்.

''இப்போது நான் தயார். நீயும் தயாரானால் வா, மோதலாம்'' என்று சவால் விட்டான் பீமன்.

பகன் தன் முஷ்டியை முறுக்கிக்கொண்டு பீமன் மேல் பாய்ந்தான். பீமன் சரேலென மின்னல் வேகத்தில் நகர்ந்தான். பாய்ந்த வேகத்தில் கீழே விழுந்த பகன் மீது தாவி அவன் தொப்பை மீது ஏறி உட்கார்ந்தான். பகன் உடனே நழுவி உருண்டு, ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி, பீமனை நோக்கி ஓங்கினான். பீமன் மற்றொரு மரத்தைப் பிடுங்கி தன் மேல் அடி விழாமல் அதைத் தடுப்பாக வைத்துக்கொண்டான். இப்படி இருவரும் மாறி மாறி மரங்களாலேயே அடித்துக் கொண்டார்கள். இந்தப் பரபரப்பில் பறவைகள் காட்டில் தங்கமுடியாமல் கீச்சிட்டுக் கொண்டே அங்குமிங்குமாகப் பறந்தன. பிறகு தள்ளி நின்று வேடிக்கை பார்த்தன.

மலை போன்ற இரண்டு மனிதர்கள் சண்டையிட்டதால் பல காத தூரம் நிலம் அதிர்ந்தது.

பகன் வெகுசீக்கிரம் களைத்துப்போய்விட்டான். "நம்மை ஏதோ ஒரு பிசாசு கொல்ல வந்திருக்கிறது. அதனிடமிருந்து தப்பித்தால் போதும்" என்று தோன்றியது அவனுக்கு. அவன்





ஓட முயன்றான். ஆனால் அவனைத் தப்பவிடவில்லை பீமன். பகன் சண்டையிலிருந்து ஓடியபோதெல்லாம் அவனை இழுத்து மொத்துவான் பீமன். கடைசியில் பீமன் கொடுத்த அடியில் பகன் மண்ணைக் கவ்வி விழுந்தான். பீமன், பகனின் முதுகில் கால் ஊன்றி, அவன் தலையையும் கால்களையும் இரு கைகளாலும் இறுகப் பற்றி, மேல் நோக்கி வளைக்கத் தொடங்கினான். பகனின் முதுகெலும்பு முறிந்தது.

காடே அலறும்படி ஓலமிட்டு பகன் மாண்டான்.

இந்த மரண ஓலத்தைக் கேட்டு பகனின் உறவுக்காரர்கள் ஓடிவந்து பீமனின் காலடியில் விழுந்து கெஞ்சினார்கள். உயிர்ப் பிச்சை வேண்டினார்கள்.

பீமன் மிடுக்குடன் சொன்னான்:

''நீங்கள் இந்தக் காட்டில் தொடர்ந்து வாழலாம். ஒரே நிபந்தனை. மனிதர்களை மட்டும் சாப்பிடக்கூடாது. ஏக சக்கரத்து மக்கள் யாரையாவது தின்னவேண்டுமானால் முதலில் என்னைச் சாப்பிடவேண்டும். என்ன சரியா?''



பூதத்தின் குடும்பத்தில் எல்லாரும். சின்னஞ்சிறு குழந்தை வரை அனைவரும் பீமனைக் கும்பிட்டனர். ''இனி மனிதரைத் தின்பதில்லை'' என்று சத்தியம் செய்தனர்.

பீமன் உடனே பகனின் உடலைத் தரதரவென்று கிராம எல்லைக்கு இழுத்துச் சென்று அங்கே கிடத்தினான். தன் தாயிடம் இந்தச் செய்தியைச் சொல்ல விரைந்தான்.



## காண்டவ வனம் எரிந்த கதை

குருக்ஷேத்திரப் போர் முடிந்ததும் தருமபுத்திரர் அஸ்தினு புரத்தின் மன்னராகி விட்டார். ஒரு நாள் கிருஷ்ணரும் அர்ச்சுனனும் யமுனை நதிக் கரையில் அமர்ந்து மாலை இளங் காற்றை அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். யுத்தம் முடிந்த பிறகு ஒரே அமைதிதான். இது சப்பென்று இருந்தது. ஒரு பரபரப்பும் இல்லை, வீரச்செயலுக்கு ஒரு வாய்ப்பும் இல்லை.

அரசவையிலுள்ள புதிய மந்திரிகளையும் அறிஞர்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். திடீரென, எதிரே நெட்டையாக ஒருவன் வரக் கண்டனர். பார்ப்பதற்குப் பெரிய மனிதனுக இருந்தான். ஆனுல் நோயாளியாகவும் மன வேதனைப்படுபவன் போலவும் தோன்றினுன். ஒவ்வொரு அடி எடுத்து வைக்கவும் படாத பாடுபட்டான். அருகே வந்ததும், இரக்கத்தைத் தூண்டும் குரலில், "ஐயா பஞ்சத் தில் வாடியவன் நான். ஆகாரம் கொடுங்கள், ஆகாரம்," என்றுன்.

கிருஷ்ணனும் அர்ச்சுனனும் ஒரே குரலில், "ஐயா உமது வயிறுமுட்ட உடனே உணவு அளிக்கிறேம். முதலில் சற்றுக்

களைப்பாறுங்கள்" என்ருர்கள். அந்தக் காலத்தில் இப்படி உபசரிப்பதுதான் வழக்கம்.

வழிப்போக்கன் தலையசைத்தான். "எனக்குச் சாதாரண உணவு வேண்டாம். எனக்கு வாய்நிறைய உணவு வேண்டும். என்னைத் தெரியவில்லையா உங்களுக்கு? நான்தான் அக்னி."

கிருஷ்ணனும் அர்ச்சுனனும் நெருங்கிப் பார்த்தனர். உண்மைதான். வந்திருந்தது, அக்னிதேவன்தான். ஆள் ஒரேயடியாக அடையாளம் தெரியாமல் மாறியிருந்தான். இருவரும் தேவனுக்கு உரிய உபசாரம் செய்து, அவன் நலத்தைப் பற்றி விசாரித்தனர். "என்ன நேர்ந்தது? ஏன் இளைத்திருக்கிருய்? இப்போது என்ன உணவு வேண்டும்? கிடைப்பதற்கு அரிதானாலும், எப்படியாவது கொண்டு தருகிறோம். சமைத்துத் தருகிறோம். சொல்" என்ருர்கள்.



"புதிதாகச் சமைக்கவேண்டாம். என் உணவு தயாராக இருக்கிறது" என்ருன் அக்னி, சோர்வுடன்.

"அப்படியா? எங்கே? அது என்ன?"

"காண்டவ வனம்"

"ஓகோ, காண்டவ வனத்தில் இருக்கிறதா?"

"இல்லை. இல்லை. காண்டவ வனமேதான்."

"என்ன?" என்று வியப்புடன் கேட்டார் கிருஷ்ணன். "ஒரு காட்டையே நீ தின்னப் போகிருயா?"

"ஆமாம்" என்ருன் அக்னி. "எதற்காக என்று சொல்லுகிறேன். சுவேதகி என்ற அரசனைப் பற்றிக் கேட்டிருக்கிறீர்களா?"

"தெரியுமே" என்ருன் அர்ச்சுனன். "அந்த அரசன் பல யாகங்கள் செய்து புகழ் பெற்றவனுயிற்றே."

"அவன்தான்" என்ருன் சோர்வுடன் அக்னி. "ஒரு நாள் சுவேதகி கட்டாயம் யாகத்துக்குப் போவான். ஆனல்

இந்த உலகத்தில் இருக்கும் வரை ஒரு அந்தணன் கூட அவனுடன் பேசமாட்டான்.''

''ஏன்?'' என்று கேட்டான் அர்ச்சுனன்.

''ஏனு? அவனுக்காக உழைத்த அந்தணர்கள் அநேக மாகக் குருடாகிவிட்டார்கள். பாவம். தினம் தவருமல், மாதக் கணக்காக, புகையும் நெருப்புக்கு முன்னே இருந்து வேதம் ஓதிவந்தால் என்ன ஆகும்? நானு புகையை எழுப் பினேன்? நாட்டில் உள்ள காய்ந்த மரம் எல்லாம் தீர்ந்ததும் பச்சை மரங்களையே எனக்குப் போட்டார்கள். அதனுல் தான் புகைந்தது. புகையெல்லாம் ஏழை அந்தணர்களின் கண்ணி லும் தொண்டையிலும் புகுந்துகொண்டது. கடைசியில் அவர் களால் தொடர்ந்து பணிபுரிய முடியவில்லை. என்ன செய்வது? அரசன் அடுத்த தேசத்திலிருந்து புரோகிதர்களை வரவழைத் துத்தான் யாகத்தை முடிக்கவேண்டி வந்தது.''

''என்ன சொல்கிருய்? இந்த யாகம் நீண்ட காலமாக நடைபெறுகிறதா?'' என்று கேட்டான் அர்ச்சுனன். கண்ண ணைப் பார்க்க வில்லை. பார்த்திருந்தால் அவரது முகத்திலிருந்த குறும்புத்தனமான சிரிப்பைக் கவனித்திருப்பான்.

''நீண்டகாலமாகவா? பல ஆண்டுகளாக நடைபெறுகிறது இந்த யாகம். சுவேதகி அரசன் ஒரு யாகத்தை முடிக்க வேண்டியதுதான். அதே மூச்சில் மற்ருெரு யாகத்தைத் தொடங்கிவிடுவான். க்ஷத்திரியர்கள் செய்யத்தக்க ஐந்து பெரும் யாகங்களையும் அவன் செய்துவிட்டான். பிறகு ஆயிரம் அந்தணர்களுக்கு தானம் செய்தான். பிறகு, அவன் நாட்டில் பெண்களும் குழந்தைகளும் நலமாக விளங்க மற்ருெரு நோன்பு எடுத்தான்.''

''அடேயப்பா. ஆசாரசீலனுன அரசனுக்குக் கூட இது அதிகம்தான்'' என்ருர் கிருஷ்ணன்.

''ஆனுல் என்னை என்ன பாடு படுத்திவிட்டான் பாருங் கள்'' என்று பெருமூச்சு விட்டான் அக்னி. ''அதுதான் பார்த்தீர்களே. அடையாளமே தெரியாமல் போய்விட்டேன். வருஷக்கணக்காக எனக்கு உணவாகக் கிடைத்த தெல்லாம் என்ன? யாகத்திலே தொடர்ந்து சட்டி சட்டியாகக் கொட்டிய படி இருந்த நெய்தான்! நினைத்துப் பாருங்கள். ஆண்டுக் கணக்கில் நெய்யைத் தவிர வேறு ஒன்றுமே தின்னுவிட்டால் எப்படி இருக்கும்! என் உடல் நிறத்தைப் பாருங்கள். பெண்

களை விட அழகாகவும் பளபளப்பாகவும் இருக்குமே என் மேனி, அந்த அழகு எங்கே? நல்ல சத்தான, ஆரோக்கிய மான உணவு கிடைக்காமல் வாடுகிறேன். அதனுல் அசதி யாகவும் சோர்வாயும் இருக்கிறேன்''.

''ஓ! அதுதான் காண்டவ வனத்தைத் தின்னவேண்டும் என்கிருயா?''

''ஆமாம். அது ஒரு காரணம். காண்டவ வனத்தில் எனக்கு வேண்டியதெல்லாம் இருக்கிறது: வாயின் உள்ளே பட்டதும் நொருங்கும் காய்ந்த சுள்ளிகள் அங்கே உண்டு. சாறு நிறைந்த பசுமையான செடியும் கொடியும் புதரும் உண்டு. எனது பல நாக்குகளில் ஒன்ருல் பழங்களின் சாற்றை உறிஞ்சுவேன்; இன்னென்ருல் அமுதம் போல இனிக்கும் விலங்கு மாமிசத்தை ருசிப்பேன்'' என்று வருணிக்கத் தொடங்கிய அக்னியைத் தடுத்து,

''இது ஒரு காரணம் என்கிருய். வேறு என்ன காரணம்?'' என்று கேட்டான் அர்ச்சுனன்.

''வேறு காரணம் இருக்கிறது,'' என்ருன் அக்னி உணவுப் பட்டியலிலிருந்து தன் நினைவைத் திருப்பி. ''காண்டவ வனம் இந்திரனுடைய பாதுகாப்பில் இருக்கிறது. எனக்கு ஒன்று புரியவில்லை. தேவலோகத்தை ஆளும் சகல வல்லமை பெற்ற இந்திரன் ஏனே பாதுகாப்பு பற்றி பயப்படுகிருன். எந்த நிமிஷமும் தன்னை யாராவது விரோதிகள் தாக்குவார் களோ, யாராவது புரட்சி செய்து பதவியைப் பிடுங்கிக்கொள் வார்களோ என்று பயப்படுகிருன். விண்ணிலும் மண்ணிலும் யாரையுமே விரோதிகளாக நினைத்துப் பார்க்கிருன்.''

''ஓகோ. காண்டவ வனத்தில் இந்திரனுக்கு நண்பர் களோ ஒற்றர்களோ இருக்கிருர்கள் போலிருக்கிறது'' என்ருர் கண்ணன்.

''ஆமாம். அவர்கள் தலைவர் யார் தெரியுமா? தட்சகன்.''

''என்ன சொன்னுய்?'' என்று அதிசயித்தான் அர்ச் சுனன், நாகர்களின் அரசன் கேவலம் ஒரு ஒற்றனுகத் தாழ்ந்து போவதா?''

''அவன் தவறு அல்ல அது. எனக்கு அவன்மீது விரோ தம் இல்லை. எங்கள் வழியில் நாங்கள் போகிருேம். ஆனல் அந்தக் காட்டில் உள்ள பாம்புகள் அவனைப் போல் நியாய



உணர்வு கொண்டவை அல்ல. மேலும் பேய்களும் பூதங்களும் பிசாசுகளும் அங்கே உள்ளன. அரக்கர்களும், மனித ரத்தம் குடிக்கும் கூளிகளும் இருக்கின்றன. விசித்திரமான பறவைகளும் பிணந்தின்னிக் கழுகுகளும் பயங்கர மிருகங்களும் உள்ளன. அந்தி மறைந்தால் அந்தப் பக்கம் போக யாருக்குமே பயம். ஏனென்றால், குழந்தை குட்டிகளைத் துஷ்ட மிருகங்கள் தூக்கிப் போய்விடும். இரவு முழுவதும் நடுக் காட்டிலிருந்து கோரமான பயங்கர ஓசை எழுந்தபடி இருக்கும். இதைக் கேட்டால் பெரியவர்களே படுக்கையில் தூக்கம் வராது புரண்டு நடுங்குவார்கள். ஏதாவது செய்ய வேண்டும். அந்தக் காடு அழியவேண்டும்."

"உன்னால் இதைத் தீர்க்கமுடியும் என்று நினைக்கிறாயா?" என்று சந்தேகத்துடன் கேட்டான் அர்ச்சுனன்.

"ஆமாம்" என்றான் அக்னி, நாக்கைச் சப்புக் கொட்டியபடி. "ஆனால் எனக்கு யாராவது உதவவேண்டும். ஏழு நாள் தனியாகவே அதைத் தின்று தீர்க்க முயன்றேன். முடியவில்லை. தொடங்கவே முடியவில்லை. இந்திரனே வானவர் உதவியுடன் அந்தக் காட்டைக் காப்பாற்றுகிறான். சோர்ந்துபோய் நான் பிரமனிடம் சென்றேன். 'கிருஷ்ணனிடமும் அர்ச்சுனனிடமும் போய்க் கேள்' என்று அவர்தான் சொன்னார். எனக்கு உதவுவீர்களா?"

அர்ச்சுனனே பதில் சொல்லட்டும் என்று கிருஷ்ணன் காத்திருந்தார். அந்தக் காடு பாண்டவர் ராஜ்யத்தைச் சேர்ந்தது.



சிறிது நேர யோசனைக்குப் பின் அர்ச்சுனன் "ஆகா. உதவுகிறோம்" என்றான். "ஆனால் எங்களுக்கு ஆயுதங்கள் தேவை. என்ன என்ன தெரியுமா? இப்போது இருப்பதைவிட கனமான வில் ஒன்று வேண்டும். ஏராளமான அம்புகள் வேண்டும். இதையெல்லாம் சுமக்க ஒரு தேர் வேண்டும். அதை இழுக்க வெள்ளைவெளேர் என்ற குதிரைகள் வேண்டும். சுற்றிலும் பல





காததூரம் மேகங்களை அலையவைக்கும் காற்றைப்போல் அவை விரையவேண்டும். கிருஷ்ணனுக்கும் சில ஆயுதங்கள் தேவை. இவற்றை எங்களுக்கு நீ தர முடிந்தால், நாங்கள் உனக்குக் காண்டவ வனத்தைத் தின்னுவதற்கு ஏற்ற பக்குவத்தில் தருகிறோம்.''

''கிருஷ்ணனுக்குச் சக்கரம்தான் தேவை. அதை நானே தருகிறேன்'' என்றான் அக்னி. ''அர்ச்சுனா, உனக்குத் தேவையான ஆயுதங்களைத் தரும்படி வருணனிடம் சொல்கிறேன்.''

கிருஷ்ணனுக்குச் சக்கராயுதம் கிடைத்தது. அதன் முனை கூராக இருந்தது. நடுவில் இருந்த துளை அவரது வலது கைச் சுட்டுவிரலுக்குச் சரியாக இருந்தது. அதை அவர் வீசினால் போதும். எதிரியின் தலையை அலட்சியமாகக் கொய்துவிட்டு மீண்டும் அவரிடமே திரும்பிவிடும்.

வருணனின் அற்புதமான வில்லையும் மாய அம்பறாத் தூணியையும் பெற்றான் அர்ச்சுனன். ஒரு அம்பை எடுத்தால் போதும். சட்டென்று உடனே ஒரு புதிய அம்பு அந்தப் பெட்டியில் தோன்றிவிடும். உலகங்களை அமைத்த விசுவகர்மா அர்ச்சுனனுக்கு ஒரு ரதத்தை அமைத்துக் கொடுத்தார். தங்கத்தால் கடிவாளம் கொண்ட வெண் குதிரைகள் அந்த ரதத்தை இழுத்தன. இவை தவிர அர்ச்சுனனுக்கு வருணன் ஒரு பெரிய கதையையும் கொடுத்தான். அதை வீசினால் இடி இடிப்பதுபோல் இருக்கும்.

அர்ச்சுனன் கவசம் அணிந்தான். இடுப்பில் வாளை எடுத்துச் செருகிக்கொண்டான். கையிலே தோல் உறைகளை மாட்டிக்கொண்டான். வில்லிலே நாண் ஏற்றினான். ரதம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துவிட்டு, அக்னியிடம் சொன்னான்:

''நாங்கள் தயார். நீ காட்டைச் சுற்றிப் பார். கிருஷ்ணனும் நானும் ஆயத்தமாகிறோம். காண்டவ வனத்தை நன்றாகத் தின்னத் தொடங்கு'' என்றான். அக்னிதேவன் சீறிக்கொண்டு காண்டவ வனத்தைச் சூழ்ந்தான். கிருஷ்ணனும் அர்ச்சுனனும் தரையிலிருந்து வானில் உயர்ந்து, காட்டின் அடர்ந்த பசுமையின்மீது அந்தரத்தில் நின்றார்கள்.

காட்டிலே பெரிதும் சிறிதுமான நூற்றுக்கணக்கான ஜந்துக்கள். பலவகை வண்ணங்கள்; பலவகை வடிவங்கள்.



அவை எல்லாம் நெருப்பு நெருங்குவதை உணர்ந்தன. எப்படியாவது தப்பவேண்டும் என்று துடித்தன. சிலவற்றுக்குத் தலை பெரிது, கால்கள் பரவியிருக்கும்; சில பிராணிகளுக்கு ஒற்றைக்கண் தான்; சில பறவைகளுக்குச் செதிள் போன்ற சிறகும் நீண்ட நகங்களும் இருந்தன. பயத்தில் அலறியபடி சில மிருகங்கள் நேரே தீக்குள்ளேயே போய் விழுந்தன! உடல் எரிந்தபடியே அவை தரையில் விழுந்து புரண்டன. ஆனால் தீ அணைவதற்கு பதிலாக, காடெங்கும் பரவியது; அந்தப் பிராணிகளை மறுபடி சூழ்ந்தது! அலறித் துடித்துச் செத்தன அவை.

அகன்ற இறக்கை விரித்த விசித்திரப் பறவைகள் கரிய மேகம் போலே காட்டின் மேலே உயர எழும்பின. கிருஷ்ண



னும் அர்ச்சுனனும் அம்பால் அடித்து அவற்றைத் தீயில் தள்ளினார்கள். கண் இமைப்பதற்குள் அவை தீக்கு இரை யாயின. காட்டின் உள்ளே பல மிருகங்கள் வியப்பாலும் பயத் தாலும் கண்ணை அகலத் திறந்து முழித்தபடி இருந்தன. நெருப்பு நெருங்கி வந்தது. பாம்புகள் புல் தரையில் நெளிந்து ஓடித் தப்பப் பார்த்தன. ஆனால் அதே கவனமாயிருந்த அக்னி, புல்லையெல்லாம் பொசுக்கினான். பாம்புகள் அழிந்தன.

காட்டின் உள்ளே இருந்த ஓடைகளும் குட்டைகளும் தீயின் வெப்பத்தில் கொதிக்கலாயின. மூட்டை மூட்டையாக மீன்கள் இறந்து மிதக்கலாயின.

தீயில் இறைச்சி பொசுங்கும் மணமே காடெங்கும் பர வியது. எரியும் காட்சியையும் பொசுங்கும் நாற்றத்தையும் சகிக்காமல் சுற்றிலும் இருந்த கிராமத்தார் வெளியூர்களுக்கு ஓடிப்போனார்கள்.

விண்வெளியில் வானவர்கள் சிறிது நேரம் வியப்புடன் பார்த்து நின்றார்கள். பிறகு அனைவரும் தங்கள் அரசனை தேவேந்திரனிடம் போனார்கள். விவரம் அறிந்த இந்திரன் சீறினான்.

“என்ன? அந்த முட்டாள், நெய்யுண்ணி அக்னி மறுபடி யும் எனது கோட்டையான காண்டவ வனத்தைத் தாக்கு கிறானா? தட்சகனும் நானும் அவனுக்கு மறக்க முடியாத பாடம் கற்பிக்கிறோம் பார்” என்று கர்ஜித்தான் இந்திரன்.

தேவர்களில் ஒருவன் அப்போது பணிவுடன் சொன்னான்: “அரசே, உங்களுக்கே தெரியுமே. தட்சகன், இப்போது காண்டவ வனத்திலே இல்லையே. அவன் இன்னும் குரு க்ஷேத்திரத்திலிருந்தே வரவில்லையே. அவன் திரும்பியிருந் தாலும் காண்டவ வனத்தைக் காப்பது கஷ்டம்தான்.”

“கஷ்டமா? எப்படி?” என்றான் இந்திரன்.

“ஏன்? அக்னி இந்த முறை தனியாக இல்லையே. துணைக்கு அர்ச்சுனனும் கிருஷ்ணனும் இருக்கிறார்கள். இந்தக் கணத்தில் அவர்கள் ரதம் வானிலே, எரியும் காட் டுக்கு மேலே உயர இருக்கிறது.”

இதைக் கேட்ட இந்திரன் ஒரு கணம் தயங்கினான். கிருஷ் ணனும் அர்ச்சுனனும் புகழ்பெற்ற வீரர்கள். வெல்ல முடி யாத வீரர்கள். ஆனாலும் இந்திரனுக்கு வந்த எரிச்சலில்

அவர்கள் மேன்மையை மறந்தான். "ஒரே மூச்சில் வனத்தையும் மீட்கிறேன்; கிருஷ்ணனையும் அர்ச்சுனனையும் வெல்கிறேன். மூன்று உலகத்திலும் நானே பெரிய வீரன் என்பதைக் காட்டுகிறேன்" என்று சூள் உரைத்தான்.

இந்த முடிவுக்கு வந்ததும் இந்திரன் தீவிரமாகச் செயலில் இறங்கினான். தேவர்களைக் கொண்டு காண்டவ வனத்தின் மீது அடர்ந்த மேகங்களைப் பரப்பினான். பல காத தூரம் பரப்பினான். ஆணை யிட்ட வுடன் அடை மழை கொட்ட வேண்டும் என்பது ஏற்பாடு.

மேலே மேகம் படர்ந்தவுடன் கிருஷ்ணனும் அர்ச்சுனனும் கணக்கற்ற அம்புகளை அதன் அடியில் எய்தார்கள். அந்த அம்புகள் மேகத்துக்குக் கீழே அடர்த்தியாகப் படர்ந்து, காட்டையே ஒரு போர்வை போலச் சூழ்ந்தன; எவ்வளவு அடர்த்தி தெரியுமா? மழை கொட்டத் தொடங்கி



யதும், கீழே நீரே சொட்டவில்லை. எல்லாம் அம்பால் ஆன அந்தக் குடையிலே கொட்டி, காட்டின் ஓரங்களில் வழிந்தது. காட்டின் எல்லையில் பெரிய ஆறுபோல ஓடியது நீர்! நெருப்பிலிருந்து தப்பிக்க முயன்ற மிருகங்கள் இந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டன. எப்படியோ எல்லாம் அழிந்தன.

ஆத்திரம் அடைந்த இந்திரன் மேலும் பல தேவர்களைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டான். மரண தேவதையான யமன், செல்வத்தின் அதிபதியான குபேரன், காற்றுத் தேவனை வாயு, என்று பலரையும் அழைத்தான். தனது வெள்ளை யானை மீது அமர்ந்து தானே முன்னின்று போரை நடத்தினான். ஆனால் கிருஷ்ணனும் அர்ச்சுனனும் அனைவரையும் சண்டையில் வென்றனர். ஆனால் இந்திரன் தோற்று ஓடிப் போகவில்லை. அவன் வாக்களித்



தபடி தட்சகனுடைய மனைவியையும் மகனையும் காப்பாற்ற வேண்டுமே. காண்டவ வனத்திலே இந்திரன் விட்டிருந்த விசித்திரமான பறவைகளையும் மிருகங்களையும் அவனுக்காக தட்சகன் பார்த்து வந்தான் அல்லவா?

தட்சகனின் மனைவி யானைமீது இந்திரனைப் பார்த்ததும், தீ நடுவே பாய்ந்து பறந்தாள். அவளது அழகிய மேனி தீயில் பொசுங்கலாயிற்று. அழகு மிக்க அந்தப் பெண் பாம்பு ஆகாயத்திலே எழக் கண்டதும் அர்ச்சுனன் அதை அம்பால் எய்யக் குறி வைத்தான். ஆனால் கிருஷ்ணன் அவனைத் தடுத்தார். "தட்சகனின் மனைவியே! உன் மகன் எங்கே? தெரியவில்லையே. நீ மட்டும் தப்பித்துக்கொண்டு உன் மகனை இங்கே சாகவிடுகிறாயா?" என்று கேட்டார்.

"என் மகன் என் வயிற்றில் இருக்கிறான். நெருப்பிலிருந்து அவனைக் காப்பதற்கு அவனை நான் விழுங்கிவிட்டேன்.







அவனைப் பிடிக்க வேண்டு மானால் என்னைக் கொல்ல வேண்டும்'' என்றாள்.

இதைக் கேட்ட அர்ச்சுனன் தன் வில்லைக் கீழே போட்டான்.

காண்டவவனம் பதினைந்து நாள் இரவும் பகலும்

எரிந்தது. அக்னி தேவன் தனது ஆயிரமாயிரம் நாக்குகளால் தனது ஆசை தீரும் மட்டும் மாமிசமும் இரத்தமும் கொழுப்புமாகத் தின்று தீர்த்தான். அலுத்துப் போய், திருப்தியடைந்ததும் தான் நிறுத்தினான். பல காத தூரம் அடர்ந்து படர்ந்து பலவகை உயிர்கள் நிறைந்து விளங்கிய அந்தக் காடு, இப்போது முடிவில்லாத பாழ்நிலமாக, சாம்பல் காடாகக் காட்சியளித்தது.



Printed at: Saraswati Art Printers, 8247/2, New Anaj Mandi, Delhi-110006

